REGD. No: TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 842313










மலர்: 4 சென்னை 26—12—1979 புதன் (★) ❋ ● ❋ (★) வெளியீடு 27-12-1979 வியாழன் இதழ் 71

★ தேர்தலுக்குப் பிறகு கமலபதி திரிபாதி-பகுகுணாவிற்கு கல்தா!

## இந்திரா காங்கிரஸ் அல்ல; சஞ்சய் காங்கிரஸ்தான்

# இ. காங்கிரஸ் ஜெயித்தால் சஞ்சய்தான் பிரதமர் ஆவார்

### நாட்டு மக்களே, வரும் அபாயம் உணர்வீர்! ஜனநாயக அணியையே ஆதரிப்பீர் !!

புதுடெல்லி, டிச. 26- அவசரநிலை காலத்தில் படுகொலைகள், அடாவடித்தனங்கள் ஒழுக்கக் கேடுகள், கருத்தடைக் கொடுமைகள் அனைத்துக்கும் காரணமாக இருந்த சஞ்சய்காந்திதான் இ காங்கிரஸ் ஜெயித்தால் பிரதமர் ஆகப்போகிருர்!

இ.காங்கிரஸ் வேட்பாளர்களாக சஞ்சய் கோஷ்டி நிறுத்தப்பட்டிருப்பதால் இந்திரா வால் பிரதமராக முடியாது. கமலபதி திரிபாதி பகுகுணா ஆகியோருக்குக் கல்தா கொடுத்து விட்டு சஞ்சய்தான் பிரதமர் ஆகப்போகிருர்! அந்த அளவுக்கு சஞ்சயின் 'மைனர்' கோஷ்டிகள் 'வேலை'யில் இறங்க இருக்கின்றன

தற்போது இருப்பது இந்திரா காங்கிரஸ் அல்ல-அது சஞ்சய் காங்கிரஸ்தான் என்பதை நீண்ட நாட்களாகவே சொல்லி வந்திருக்கிறோம்.

அவசரநிலையின்போது படுபயங்கர கொடுமைகளுக்குக் காரணமாக இருந்த சஞ்சய் காந்தி, தனது தாயாரைத் தள்ளி விட்டு தானே எல்லாம் என்று ஆகி விடுவதற்கு பாடுபட்டு வருகிருர்.

### மெஜாரிட்டி கிடைக்காது

தற்போது இ.காங்கிரஸ் சார்பில் போட்டியிடும் வேட்பாளர்களில் பெரும்பகுதியினர் சஞ்சய்காந்தியின் ஆதரவாளர்களே.

தற்போதைய நிலையில் நாடாளுமன்றத்தில் எந்தக் கட்சிக்கும் தனிப் பெரும்பான்மை கிடைக்கப் போவதில்லை.

அப்படியே இ. காங்கிரசுக்கு மெஜாரிட்டி கிடைத்து விட்டால் பிரதமராகப் போவது இந்திரா அல்ல. இந்திரா வேறு வழியின்றி ஒதுங்கிக் கொள்ளப் போகிருர்.

இந்திராவை விட்டால் மூத்த தலைவர்கள் கமலபதி திரிபாதி, பகுகுணா ஆகியோர்தான்.

ஆனால் இ. காங்கிரஸ் சார்பில் நிறுத்தப்பட்டுள்ள பலபேர் சஞ்சய் ஆட்கள் என்பதால் இந்த மூத்ததலைவர்கள் பிரதமராக முடியாது. சஞ்சய் தான் அனைவரையும்தள்ளி விட்டு பிரதமராகி விடுவார்.

எப்படியும் பிரதமராகி விடவேண்டும் என்று ஆலாய்ப் பறந்தபடி சஞ்சய்காந்தியும், அவரது 'மைனர் ஷோக்குப்' பேர்வழி நண்பர்களும் 'வேலை'யை நடத்திக்கொண்டு இருக்கிருர்கள்.

### ஜனதா தலைவர் அறிக்கை

ஜனதாக் கட்சி பொதுச் செயலாளர் நானாஜி தேஷ்முக். இது சம்பந்தமாக அவசரம் அவசரமாக ஒரு அறிக்கை வெளியிட்டார். அதில் அவர் கூறிஇருப்பதாவது:

இ. காங்கிரஸ் கட்சியையும், இ. காங்கிரஸ் பார்லிமெண்டரி கட்சியையும் சஞ்சய் காந்தியிடம்ஒப்படைக்க இந்திரா முடிவு கட்டி விட்டார். இ காங்கிரஸ் வேட்பாளர்கள் மூன்றில் ஒரு பகுதியினர் சஞ்சய்காந்தியின் ஆதரவாளர்களே!

அவசர நிலை காலத்தில் படு பாதகச் செயல்கள் புரிந்த சஞ்சயின் ஆதிக்க கும்பல் (காகஸ்) மீண்டும் தலைதூக்கியுள்ளது.

தன்னைப் பாதுகாத்துக் கொண்டு வாதிடவே சஞ்சய் காந்தி தேர்தலில் நிற்கிருன் என்று இந்திரா கூறுகிருர். இப்போது சரி. ஆனல் இந்திரா பிரதமராக இருந்தபோதே சஞ்சய் காந்தி தேர்தலில் போட்டியிட்டாரே ஏன்?

இந்திரா தனது வாரிசை அரசியலுக்குக் கொண்டு வரத் திட்டமிட்டு விட்டார்!

ஒரு குடும்ப ஆட்சி நடத்தப் பார்க்கிருர்.

எனவே இப்போது இ. காங்கிரசுக்கு ஓட்டுப்போடுவது அது அந்தகட்சிக்கோ இந்திராவுக்கோ பயன்படாது. சஞ்சய்க்குத்தான் பயன்படும் என்பதை மக்கள் புரிந்து கொண்டு விட்டனர்.

இவ்வாறு நானாஜி தேஷ்முக் அந்த அறிக்கையில் கூறியுள்ளார்.

---

## கருணாநிதி முகத்தில் இந்திரா கரிப்பூச்சு

கருணாநிதி முகத்தில் இந்திரா கரி பூசினர். காலை வாரி விடும் படலம் தொடங்கிவிட்டது.

தமிழ்நாட்டில் இ. காங்கிரசில் யாரையோ பிடித்து மத்திய சென்னை தொகுதியில் மூன்று இடங்களில் இந்திரா பேசுவார் என்று அறிவிக்கப்பட்டது.

இதனை அறிவித்தவர் மாவட்ட தி.மு.க. செயலாளர் ஆர்.டி. சீதாபதி.

அது மட்டுமல்ல இந்திராகாந்தியுடன் கருணாநிதி மூப்பனர், இளையபெருமாள் ஆகியோர் அருகருகே நின்றுகொண்டு செல்வார்கள் என்றும் அறிவிக்கப் பட்டது.

### இடையிலே என்ன நடந்ததோ தெரியவில்லை!

டெல்லியிலிருந்துவந்த தாக்கீதின்படிநிகழ்ச்சிகள் மாற்றப்பட்டன.

### "சென்னையில் எந்த இடத்திலும் இந்திரா பேச மாட்டார்"

கருணாநிதி முகத்தில் முதல் கரிப்பூச்சு!

"காரின் முன் பக்கத்தில் இந்திரா மட்டுமே இருப்பார் மற்றவர்கள் காரின் பின் பக்கம் இருப்பார்கள்" என்று அறிவிப்பு.

கருணாநிதி முகத்தில் இரண்டாவது கரிப்பூச்சு.

இன்று காலை சென்னை வந்த இந்திரா, நகரில் எந்த இடத்திலும் பேசவில்லை. மூடப்பட்ட காரில் இந்திரா சென்ருர்.

கருணாநிதியின் முகத்தில் கரிபூசும் படலம் ஆரம்பமாகி விட்டது!

அடுத்து என்னென்ன விபரீதங்கள் நடக்குமோ?

காண்போம்! பொறுத்திருங்கள்!!

---

'கருணாநிதி புளுகுக்கு ஆணித்தரமான பதில்'

## மத்தியில் ஜனதாவே ஆட்சி அமைக்கும்

# ஜெகஜீவன்ராம் அடுத்தபிரதமர்

### லட்சோபலட்சம் மக்களிடையே புரட்சித்தலைவர் எழுச்சியுரை

தூத்துக்குடி, டிச. 26- எனக்குக் கிடைத்துவருகிற தகவல்களின்படி நாட்டின் தற்போதைய நிலையில் பிற தோழமைக் கட்சிகளின் ஆதரவுடன் ஜனதாகட்சிதான் டெல்லியில் ஆட்சி அமைக்கும் ஜெகஜீவன்ராம்தான் இந்தியாவின் அடுத்த பிரதமர் ஆவார் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்த போது கூடியிருந்த லட்சோப லட்சம் மக்கள் ஆர்ப்பரித்து விண்ணதிர கைதட்டி வாழ்த்தொலிகளை எழுப்பினர்கள்.

கருணாநிதியின் கடைந்தெடுத்த பொய்ப் பிரச்சாரங்களை முறியடிக்கும் வகையில் ஆணித்தரமான பதில்களை அடுக்கடுக்கான ஆதாரங்களுடன் புரட்சித்தலைவர்விளக்கினர்.

தூத்துக்குடியில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசும்போது கூறியதாவது:-

நான் டெல்லிக்குச் சென்றபோது இந்தி திணிப்பு எதிர்ப்பை கைவிட்டுவிடாதீர் என்று எல்லா மாநில முதல்வர்களும் என்னை கேட்டுக்கொண்டனர்.

இந்திராகாந்தி ஆட்சிக்கு வந்தால் மீண்டும் இந்தி திணிப்பு வரும் என்று அவர்கள் சொன்னர்கள்.

### நிர்ணயம் செய்வது மக்களே

இந்திராகாந்தியை ஆட்சிக்கு வரவிடமாட்டேன் என்று நான் பேசியதாக கருணாநிதி கூறிவருகிறா.

நாட்டின் பிரதமர் யார் என்பதை நிர்ணயிப்பது நாட்டு மக்கள்தான், நான் அல்ல.

### தேசிய உணர்வு குடும்பசொத்தா?

இந்தியாவில் ஒரு கட்சி ஆட்சி இருக்கவேண்டும் என்கிருர்கள். அகில இந்தியகட்சிக்குத்தான் தேசிய உணர்வு இருக்கும் என்றும் சொல்லுகிருர்கள்.

நமக்கு மட்டும் தேசிய உணர்வு இருக்காதா? ஒரே மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்தவர்கள்தான் தொடர்ந்து பிரதமராகவரவேண்டுமா? நாட்டுமக்கள் சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

### இந்திரா சதிவலை

தனக்கு மாநிலங்களில் செல்வாக்கு இல்லாததற்கு காரணம் மாநிலக்கட்சிகள் தான் என்பதை உணர்ந்த இந்திராகாந்தி இப்போது மாநில கட்சிகளை அழித்துவிடவேண்டும் என்று பேசி வருகிருர். மாநிலக் கட்சிகளை வளரவிடக்கூடாது என்று கூறி வருகிருர்.

### நிலைமை என்ன?

இப்படிச் சொல்லும் அவர் ஆட்சிக்கு வந்தால் நிலைமை என்னவாகும்?

யார் இந்த சஞ்சய்காந்தி என்று சஞ்சய் பற்றி அவசர நிலை காலத்திலேயே நான் கேட்டவன்.

தனிப்பட்ட முறையில் இந்திராகாந்தியை நாங்கள் எதிர்க்கவில்லை. ஆனல் அவரது சாவாதிகார உணர்வை நாங்கள் எதிர்க்கிருேம்.

எனக்கு கிடைத்து வருகிற தகவல்களின்படி நாட்டின் தற்போதைய நிலையில் பிற தோழமைக்கட்சிகளின் ஆதரவுடன் ஜனதா கட்சிதான் டெல்லியில் ஆட்சி அமைக்கும். ஜெகஜீவன்ராம்தான் இந்தியாவின் அடுத்த பிரதமர் பத



(5ம் பக்கம் பார்க்க)

---

வரவேற்க ஆளே இல்லை!

## இந்திரா-மூப்பனர் மோதல்

சென்னை, டிச 26- சென்னைக்கு வந்த இந்திராகாந்திக்கு பெரும் அதிர்ச்சிகள் காத்து இருந்தன.

(1) விமானநிலையத்தில் வரவேற்க வந்தவர்கள் எண்ணிக்கை 387 பேர்.

(2) வழியில்எங்கும் மக்களே இல்லை

(3) தி மு க, இ காங்கிரஸ் மோதலால் சென்னையில் அறிவிக்கப்பட்ட எந்த இடத்திலும் இந்திராவால் பேச முடியவில்லை கூட்டம் இல்லாததால் பேச மறுத்து விட்டார்.

(4) பூந்தமல்லியில் பொதுக்கூட்டம் என்ருர்கள். கூட்டணிக்கு ஓட்டு போடுங்கள் என்ற இந்திராவின் வாய் வார்த்தை முடியுமுன் வண்டி கிளம்பிவிட்டது.

(5) காஞ்சிபுரம் பொதுக் கூட்டத்திற்கு திரண்டு இருந்தவர்கள் எண்ணிக்கை சில ஆயிரம் பேரே.

(6) இந்திராவுடன் காரில் ஏற மறுத்த மூப்பனர் தனியாகப் போனர், காஞ்சிபுரம் கூட்டத்தில் "மூப்பனர் வாழ்க" என்று ஒரு கோஷ்டியும், "இந்திரா வாழ்க" என்று ஒரு கோஷ்டியும் கூச்சல் போட்டது

7) கருணாநிதி பேச எழுந்தார் முடியவில்லை. அடுத்த முறை இந்திரா தமிழகம் வரும்போதுஇந்தியாவின் பிரதமராக வரவேண்டும் என்று அவர் கூறிய போது

(5-ம் பக்கம் பார்க்க)

# ஜனதா பிரச்சாரம். ஹேமமாலினி, தேவ்ஆனந்த்-அம்ஜத்கான் தீவிரம்

புதுடெல்லி, டிச. 26- சர்வாதிகாரி இந்திரா ஆட்சிக்கு வந்தால் ஜனநாயகம் அழிந்து மக்கள் அடிமை ஆவார்கள்.

எனவே ஜனதாவையே மக்கள் ஆதரிக்கவேண்டும் ஜனதாவை ஆதரித்து பிரச்சாரம் செய்ய நாங்கள் தயார் என்று ஹேமமாலினி, தேவ் ஆனந்த், சத்ருகன்சின்கா, அம்ஜத்கான் ஆகியோர் அறிவித்துள்ளனர்.

இந்திரா காங்கிரசையும் அதன் அணியையும், எதிர்த்துப் பிரச்சாரம் செய்ய இந்தித் திரைப் படத்துறையினர் முடிவு செய்துள்ளனர்.

தமிழ்நாட்டை சேர்ந்த நடிகை ஹேமமாலினி, மற்றும் தேவ் ஆனந்த், சத்ருகன் சின்ஹா, அம்ஜத்கான் ஆகியோர் ஜனதாக் கட்சியை ஆதரிக்கிறார்கள்.

ஜனதாக் கட்சியையும் அதன் அணியையும் ஆதரித்துப் பிரச்சாரம் செய்யவும் அவர்கள் முடிவு செய்துள்ளனர்.

இவர்கள் தங்கள் ஆர்வத்தை ஜனதாக் கட்சி மேலிடத்துக்குக் தெரியப்படுத்தியுள்ளனர்.

டெல்லி ஜனதாக் கட்சி தேர்தல் பிரச்சார கமிட்டி அமைப்பாளர் மதன்லால் குரானு இது பற்றிக் கூறுகையில் "நடிகர் நடிகைகள் கூறி இருப்பதன்படி பிரச்சாரத்துக்கு அவர்களைப பயன்படுத்திக் கொள்வதா வேண்டாமா என்று இன்னும் முடிவு செய்யவில்லை" என்றார்.

# பி. கண்ணன் திறந்துவைத்த தேர்தல் அலுவலகம்

சேலம், டிச 26- சேலம் நகரம் தேர் நிலையம் அருகே வி. அப்பாவு தலைமையில் சேலம் நாடாளுமன்றத் தொகுதி கழக வேட்பாளர் பி கண்ணன் தேர்தல் அலுவலகத்தை திறந்து வைத்தார் அடியார், என். ரத்தினவேலு, கவிஞர் ஞானபாரதி ஏ. ராமானுஜம் அருள்மொழிசுப்ரு சி கிருஷ்ணன் எம்கேராமச்சந்திரன் ஜெய்சாமி ஆகியோர் கலந்து கொண்டுபேசினர்.

# சர்வாதிகார சக்தியை முறியடிப்பீர்: கிருபளானி அறிக்கை

புதுடெல்லி, டிச 26- சர்வாதிகார கட்சிகள் மீண்டும் இத்தேர்தலில் தலை தூக்கமுடியாதபடி முறியடிக்க வேண்டும் என்று கிருபளானிதெரிவித்தார்

கிருபளானி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

1977- ஆம் ஆண்டு பொது தேர்தல் நடந்தது. அத்தேர்தலில் இந்திரா காந்தி தோல்வி அடைந்தார்.

அதனால்சர்வாதிகாரசக்திகள் அழிந்துவிட்டதாக நாடு எண்ணியது.

ஆனால் இப்போது அந்த சர்வாதிகார சக்தி மீண்டும் தலை தூக்க ஆரம்பித்துள்ளது.

இம்மாதிரி நேரத்தில் தான் வாக்காள பெருமக்கள் மிகவும், கவனத்துடனும், எச்சரிக்கையுடனும் இருந்து செயல் படவேண்டும் அப்படி இல்லையேல் இந்தியாவில் ஜனநாயகமே அழிந்துவிடும்.

இந்தியாவின் ஜனநாயகத்தை காப்பாற்ற வேண்டியது இந்நாட்டின் வாக்காளப் பெருமக்களின் பெரும் கடமையாகும் அவர்கள் கையில் தான் இந்தியாவின் நிலையே உள்ளது.

ஜனநாயகமும், சுதந்திரமும் பலப்படுத்தப்பட்டால் இதுபோன்ற சர்வாதிகார சக்திகள் தானாக அழிந்துவிடும்.

எனவே நடக்கவிருக்கும் நாடாளுமன்ற தேர்தலில் சர்வாதிகார சக்திகள் தலை தூக்காமல் இருக்க மக்கள் அதை முறியடிக்க வேண்டும்.

## ஏல விளம்பரம்

1) ஷிராமல் ஜெயின் 42 செப்பட் ரீஸ் ரோடு செ 18 (1976 டிசம்பர் முதல் ஆகஸ்ட் 78முடிய) 2) K மாணிக்சந்த் அண்ட் சன்ஸ் 20, எஸ். நகர 3-வது தெரு செ 94 (1974 பிப்ரவரி முதல் அக்டோபர் 75 முடிய) 3) பாரஸ்மல் ஜெயின் 17-A, B.V நாயக்கன்தெரு செ-5. (1.74 பிப்ரவரி முதல் ஜூலை 78 முடிய) 4) மஹாவீர் அண்ட் கோ 180 N.M.M. ரோடு, செ-94. (1974 டிசம்பர் முதல் ஜூன்78 முடிய 5)பூல் சந்த் அண்டு கோ., 1, எஸ். நகர், 3-வது தெரு, செ 94. (19 5 ஜனவரி முதல் டிசம்பர 1977 முடிய) ஆக மேற்படி ஏலங்கள் தேதி 2-1 80 அன்றும், (6) ஸ்ரீ மஹாவீர் பண்ட்ஸ் (பி) லிட்., 156. திருவல்லிக்கேணிஹை ரோட் செ-5. (1973 ஜூலை முதல் டிசம்பர் 78 முடிய) (7) ஜி. சாந்திலால் ஜெயின், 216, ஆற்காட் ரோட், செ 26. (1974 நவம்பர் முதல் அக்டோபர் 75 முடிய) (8) ஜி. கிரிதாரிலால் ஜெயின். 216 A, ஆற்காட் ரோடு, செ-26. (1975 மார்ச் முதல் அக்டோபர் 77 முடிய) மேற்படி 2 எண் 6லிருந்து 8 முடிய தேதி 3-1-80 அன்று மேற்படியார்களிடம் அடகு வைக்கப்பட்டு கெடுவு முடிந்து மீட்கப்படாத அடகு பொருள்களை நெ,64, எல்லிஸ்ரோடு செ-2-ல் A. கிரிதாரிலால் அவர்கள் வருவாய்துறை அதிகாரிகள் முன்னிலையில் ஏலம் போடுவார்.

# நாட்டு நலன் காப்பீர்: கிறிஸ்தவ மக்களுக்கு பி. டி. எஸ். செய்தி

சென்னை டிச 26 நாட்டு நலனுககாக கிறிஸ்தவ மககள் பாடுபட வேண்டுகிறேன் என்று சமூகநல அமைச்சர் பி. டி. எஸ். கிறிஸ்துமஸ் செய்தியில் கூறியுள்ளார்.

கிறிஸ்துமஸ் விழாவை யொட்டி அமைச்சர் பி. டி. எஸ். எழும்பூர் வெஸ்லிசர்ச்சுக்கு தனது தாயாருடன் சென்றார்.

கிறிஸ்தவ மக்களுக்கு அமைச்சரும், அமைச்சருக்கு கிறிஸ்தவ மக்களும் பரஸ்பரம் வாழ்த்துத் தெரிவித்துக்கொண்டனர்.

பி டி.எஸ். விடுத்துள்ள கிறிஸ்துமஸ் செய்தி வருமாறு:

தமிழக அரசியல் வரலாற்றில் அமைச்சரவையில் ஒரே நேரத்தில் 2 கிறிஸ்தவர்களுக்கு (எட்மண்ட், பி. டி. எஸ்) அமைச்சர்பதவி கொடுத்தது புரட்சித்தலைவர் தான்

இந்த ஆட்சி சீரோடும், சிறப்போடும், நீதி- நேர்மையோடும் நடப்பதை கிறிஸ்தவர்களும் நாட்டு மக்களும் அறிவார்கள். வணக்கத்துக்குரிய பேராயர் சுந்தர்கிளார்க் அவர்கள் முதல்வர்புரட்சித் தலைவர் மீது அன்பும் பாசமும் கொண்டவர்.

அந்த பாசத்தை கிறிஸ்தவமக்கள் வெளிப்படுத்தும் வகையில் கழக அணிக்கு வாக்களிக்குமாறு வேண்டுகிறேன்.

நாட்டில் ஜனநாயகம் நிலைக்க நல்லாட்சி நடைபெற நாடுவேட்டைக்காடு ஆகாமல் காப்பாற்றபபட கழக அணிக்காக கிறிஸ்தவர்கள் பாடுபட முன்வருமாறு பணிவுடன் வேண்டுகிறேன்.

கிறிஸ்தவ மக்களுக்கு இதயங்கனிந்த கிறிஸ்துமஸ் வாழ்த்துக்கள்.

இவ்வாறு அமைச்சர் பி.டி.எஸ். கூறியுள்ளார்.

# பொ.அன்பழகன் தீவிர வாக்குச் சேகரிப்பு

ராமநாதபுரம், டிச 26- ராமநாதபுரம் நாடாளுமன்றத் தொகுதியில் போட்டியிடும் கழக வேட்பாளர் பொ. அன்பழகன் தீவிரமாக வாக்குகள் சேகரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்.

முதுகுளத்தூர் தொகுதியைச்சேர்ந்த புழுதிக்குளம் தட்டாங்குடியிருப்புசாத்தனூர், விக்கிரவாண்டிபுரம் நல்லுகுறிச்சி கீழக்கொடுமளூர், மேலக்கொடுமளூர், பெருங்கருணை சிறுகுடி கீழக்குளம் மேலகுளம் அபிராமம், மணலூர், நல்லூர், கீரனூர், செல்வநாயகபுரம் மற்றும் பல கிராமங்களுக்கு சென்று வீடுவீடாக மக்களைச் சந்தித்து வாக்குகளை சேகரித்தார்.

தொகுதி அமைப்பாளர் எஸ். எம். கருமலையான் கே. ராமர், யூசுப், அம்பிகாபதி, குப்பமுத்து, ஜக்கரியா, கே. கண்ணன், குருசாமி வளநாடு, கொண்ணமுத்து துரிராமு, பாலகிருஷ்ணன் காஜா, புழுதிகுளம் ராமசாமி மற்றும் பல கழகச் செயல்வீரர்கள் கூட்டணி தோழர்கள் கிராமம் கிராமமாகச் சென்று தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்தனர்.

# இந்தியா முழுதும் 4½ லட்சம் வாக்குச் சாவடிகள்

புதுடெல்லி, டிச. 26- இந்தத்தேர்தலில் இந்தியா முழுதும் 4, 37, 166, வாக்குச் சாவடிகளைத் தேர்தல் கமிஷன் நிறுவுகிறது. 1977ல் இந்த வாக்குச் சாவடிகளின் எண்ணிக்கை 3,73 908 அதற்கு முன்பு 1967 தேர்தலில் இருந்த வாக்குச் சாவடிகளின் எண்ணிக்கை 2,67,555

இம்முறை அசாம் தவிர மற்ற மாநிலங்களிலெல்லாம் இதற்கு முந்தைய தேர்தல்களைவிட வாக்குச் சாவடிகளின் எண்ணிக்கை கூடுதலாக இருக்கும்.

அசாமில் மட்டும் மொத்தம் உள்ள 14 தொகுதிகளில் 3 தொகுதிகளில் தான் தேர்தல்நடக்கிறது.

உத்தரப் பிரதேசத்தில் தான் இந்தியாவிலேயே அதிகப்படியான 65,504 வாக்குச்சாவடிகள் இருக்கும். லட்சத் தீவில்தான் மிகவும் குறைவாக 27 வாக்குச்சாவடிகள் இருக்கும்.

அடையாறில்

# தந்தை பெரியார் விஞ்ஞான அருங்காட்சியகம்

சென்னை, டிச. 26- தந்தை பெரியார் நூற்றுண்டு விழாக்குழுவின் பரிந்துரையை ஏற்று, தந்தைபெரியார், பெயரில் சென்னையில் விஞ்ஞான அருங்காட்சியகம் (மியூசியம்)ஒன்றினை நிறுவ தமிழ்நாடு அரசு தீர்மானித்துள்ளது.

இந்த விஞ்ஞான அருங்காட்சியகம், சென்னை அடையாறில் உள்ள பாலிடெக்னிக் வளைவுக்குள் அமைக்கப்படும். இதற்காக 10 ஏக்கர் நிலம் ஒதுக்கப்பட்டுள்ளது.

# கவிஞர்கோவிந்தசாமி நிகழ்ச்சிகள்

டிச 27-திட்டக்குடி-வதிட்டபுரம், 28-கொடுங்கூர (பெரம்பலூர்), 30- நெய்வேலி நகரம்.

காந்தியின் பண்பு பெரியார் கருத்து

அண்ணா லட்சியத்தைச் சேர்த்தவர்

# தாழ்த்தப்பட்ட மக்கட்கு சமத்துவ வாழ்வு தந்தவர் புரட்சித்தலைவர்

திருவாரூர் தங்கராசு முழக்கம்

**சென்னை, டிச. 26-காந்தியின் பண்பையும், பெரியாரின் கருத்தையும், அண்ணாவின் இலட்சியத்தையும் ஒன்று சேர்த்து செயல்படுத்துபவர், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சமத்துவ வாழ்வு அளித்தவர் புரட்சித்தலைவர் என்று திருவாரூர் தங்கராசு கூறினார்.**

துவக்கத்தில் சீர்காழி கோவிந்தராஜன் தமிழ்த் தாய் வாழ்த்துப்பாடல் ஒன்றைப் பாடினார்.

திராவிடர் கழக பொதுச் செயலாளர் திருவாரூர் தங்கராசு மயிலை ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில்நடந்த புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர். நூல் வெளியீட்டு விழாவில் கலந்து கொண்டு பேசியதாவது:

"புரட்சித்தலைவர் எம். ஜி. ஆர்." என்ற இந்த புத்தகத்தை பல தொல்லைகளுக்கு இடையே எனது நண்பர் நாகை தருமன் தயாரித்து வெளியிட்டு உள்ளார். அவர் ஒரு நல்ல எழுத்தாளர். ஒரு நல்ல இலக்கியவாதி புரட்சித்தலைவரை பற்றிய முழு விவரங்களையும் இந்த புத்தகத்தில் தெளிவாக வெளிப்படுத்தியுள்ளார்.

அன்பும், பண்பும், ஆற்றலும், அறிவும், அடக்கமும்கொண்ட பெரியாரின் பாதையில் இன்று புரட்சித் தலைவர் அவர்கள் செல்கிறார்கள். பெரியாரின் வழியில் நடந்து, அறிவிலும் ஆற்றலிலும் மேலாகத் திகழ்ந்து வந்தவர் அறிஞர் அண்ணா. அண்ணாவின் வழியில் நாம் இப்போது புரட்சித்தலைவரை காண்கிறோம்

உத்தமர் காந்தி சமுதாயத்தில் மறுமலர்ச்சி ஏற்படும் மாபெரும் புரட்சியை ஏற்படுத்தினார். அந்த புரட்சி ஏழ்மையான எளிமையானபுரட்சி. அந்த புரட்சியில் வெற்றி கண்டவர் காந்தி. அந்த பாணியில்இப்போது புரட்சித்தலைவர் அவர்கள் இந்த நாட்டை நடத்தி வருகிறார். இதனால் இந்த நாட்டுமக்கள் இதயத்தில் அவர் இடம் பெற்றுள்ளார்.

## காந்தி அண்ணா

காந்தியின் பண்பையும் பெரியாரின் கருத்தையும், அண்ணாவின் லட்சியத்தையும் ஒன்று சேர்த்து இருப்பவர் நமது புரட்சித் தலைவர். சமுதாயத்தில் தாழ்த்தப்பட்ட மக்களுக்கு சமத்துவ வாழ்வு அளித்தவர் புரட்சித்தலைவர்.

அரசியல் துறையில் மக்களின் செல்வாக்கை பெற்ற தன்னிகரற்ற தலைவர் புரட்சித்தலைவர். எனவே அவர் தன் பணியில் தொடர்ந்து சீரிய முறையில் செயலாற்றி பெரும்புகழ் பெற வேண்டும் என்று மனமார வாழ்த்துகிறேன்.

இப்புத்தகத்தைத் தயாரித்த என் நண்பர் நாகை தருமன் ஒரு நல்ல எழுத்தாளர் அவர் தம்முடைய அரிய முயற்சியால் இதை உருவாக்கியுள்ளார். அவர் இதுபோல மேலும் பல புத்தகங்களை எழுதி வெளியிடவேண்டும் என்று வாழ்த்துகிறேன்"

இவ்வாறு திருவாரூர் தங்கராசு பேசினார்.

# ராசன் செல்லப்பா தீவிர வாக்குகள் சேகரிப்பு

திண்டுக்கல், டிச. 26 திண்டுக்கல் நாடாளுமன்ற கழக வேட்பாளர் ராசன் செல்லப்பா திருமங்கலம் தொகுதியில் 50க்கும் மேற்பட்ட கிராமங்களுக்குச் சென்று வீடுவீடாக மக்களைச் சந்தித்து வாக்குகள் சேகரித்தார்.

வேட்பாளருடன் அமைச்சர் பி.டி எஸ். ஆனந்தன் ஜெயக்கொடி, இங்கர்சால், உலகப்பா, சவுரி, வழக்கறிஞர் எஸ். கே. ஜி. சேகர், முத்துமணி மற்றும் பல சென்று வாக்குகள் திரட்டினர்.

# கழகதோழர்கள் தீவிர தேர்தல் பணி

சித்தூர், டிச. 26- சித்தூர் நாடாளுமன்றத் தேர்தல் பொறுப்பாளர்களாக உள்ள பி கோவர்தன்நாத் ஏர்வை பக்கர் தொகுதி முழுவதும் தேர்தல் பணிகளைக் கவனித்து வருகின்றனர்.

பி. கோவர்தன்நாத், ஏர்வை பக்கர், ஆர். வி. என். சண்முகம், முனவர் பாஷா ரங்கசாமி, ஜெயக்குமார், மல்லாணூர் கோபால் மற்றும் பலர் சென்று தேர்தல் பிரச்சாரம் செய்து வருகின்றனர்.

குப்பம் தொகுதி, நங்கமங்கலம், பொம்மசமுத்திரம், சித்தப்பாரை மற்றும் பல இடங்களுக்குச் சென்று தேர்தல் பிரச்சாரம்செய்தனர். சித்தூர் மார்க்கெட் சவுக்கில் சூரியநாராயணு தலைமையில் சிட்டிபாபு எம். எல். ஏ, தேர்தல் அலுவலகத்தைத் திறந்து வைத்தார். பி. கோவர்தன் நாத், ஏர்வை பக்கர் எம். பி. அண்ணாமலை கோபிநாத் ஆகியோர் பேசினர்.

# தேர்தல் பணிமனை திறப்பு விழா பொதுக்கூட்டம்

சென்னை, டிச. 26- சென்னை 127-வது வட்டம் பீமண்ணன்பேட்டையில் தேர்தல் பணிமனைத் திறப்பு விழாவும் பொதுக்கூட்டமும் இன்று 26-ந் தேதி (புதன்) மாலை 6 மணிக்கு நடக்கிறது.

வட்ட அமைப்பாளர் பி.வி. கிருஷ்ணன் தலைமை வகிக்கிறார். தென்சென்னை கழக வேட்பாளர் சுலோசனா சம்பத் தேர்தல் பணிமனையைத் திறந்து வைக்கிறார்.

டி. கே. கபாலி எம். எல் ஏ. சந்திரா, பி. டி. ராகவன், மயிலை வே. தமிழ்மணி, மயிலை தம்பிதுரை, மந்தைவெளி நடராசன், ராமசாமி, கை. பிரம்மையா, வெ. மாயன், ராதாபாய், அருள்மொழி, எஸ். ரத்தினசாமி, ஏ. நடேசன், டி. பாலகிருஷ்ணன், எஸ். இளநீலன், வைத்தியநாதன், அண்ணாமலை, எம். சண்முகம், சி. கிருஷ்ணன் மற்றும் பலர் பேசுகின்றனர்.

## ஏல விளம்பரம்

1) ஆர். பிரதாப்மல் சௌகார், 165. ஸ்டராஹன்ஸ் ரோடு, M-12, (மே 73 முதல் டிசம்பர் 74 வரை) ஏலத்தேதி: 3-1-80 காலை 11 மணி, 2) K. R. மிட்டாலால், 55. P. V. கோயில் தெரு, Ms-7. (ஏப்ரல் 74 முதல் ஜனவரி 78 வரை, ஏலத்தேதி: 29-12-79, மாலை 3 மணிக்கு 3) K. அன்ராஜ்சௌகார், 66 பேப்பர்மில்ஸ்ரோடு, Ms-11 (ஜனவரி 74 to டிசம்பர் 75 வரை) ஏலத்தேதி 29-12-79 மதியம் 12மணி 4) S. பிரேம் சந்த், 12 P.H.ரோடு, கெல்லீஸ், Ms-10 (ஜனவரி 74 to ஜூன் 78 வரை ) ஏலத்தேதி 6-12-79 மாலை 3 மணிக்கு 5) . தர்மீசந்த் ஜெயின் 46. வேலாயுதசெட்டிதெரு, Ms-2 (ஏப்ரல் 73 to ஜனவரி 76 வரை) ஏலத்தேதி:- 31-12-79 மதியம் 12 மணிக்கு, 6) கஞ்சன் தேவி, 8. சுப்ராயசெட்டி 3rd லேன், Ms-12 (பிப்ரவரி 74 முதல் ஜூன் 75 வரை) ஏலத்தேதி: 28-12-79 காலை 10 மணிக்கு 7) G. மானக் சந்த் சௌகார், 14, படவேட்டம்மன் கோயில் தெரு, Ms-12 ஏலத்தேதி:- 3-1-80 பகல் 2 மணி 8) B. M. பீகம் சந்த், 29. ஸ்டராஹன்ஸ் ரோடு Ms 12 (அக்டோபர 74முதல் ஜூன் 78 வரை) ஏலத் தேதி 4-1-80 காலை 10 மணி 9 M. மான்மல் ஜெயின் 1.6. P.T.H ரோடு, Ms-12 (மே 75 to செப்டம்பர் 78 வரை) ஏலத் தேதி; 4-1-80 காலை 10 மணி. 10) ஜீவ்ராஜ் பன்னாலால்போரா 35, சுந்தர முதலி தெரு, வியாசர்பாடி, Ms-39 (பிப்ரவரி 74 முதல் அக்டோபர் 78 வரை) ஏலத் தேதி: 4-1-80 பகல் 2 மணி. 11) S, பூல்சந்த் சௌகார், 5, கிருஷ்ணதாஸ்ரோடு, Ms-12 (ஜூலை 73 முதல் ஜூன் 78 வரை) ஏலத் தேதி: 4-1-80 பகல் 12 மணி. 12) ஜவரிலால் ஜுக்ராஜ், 62, மேல்பட்டி பொன்னப்ப முதலி தெரு Ms-39 (செப்டம்பர் 73 முதல் ஆகஸ்ட் 78 வரை) ஏலத்தேதி 4-1-80 மாலை 4 மணி (13) சஜ்ஜன் பாய் அண்டு கோ., 53, எம். டி. எச் ரோடு. Ms-49 (பிப்ரவரி 77 முதல் செப்டம்பர் 78 வரை) ஏலத்தேதி: 3-1-80 காலை 10 மணி 14) B மிட்டாலால் சௌகார், 29, ஸ்டராஹன்ஸ் ரோடு, Ms-12 (ஜனவரி 74 முதல் பிப்ரவரி 76 வரை) ஏலத் தேதி: 31-12-79 மாலை 3 மணி (15) கன்பத்லால் நெமிசந்த் ஜெயின், 11/12, புதுத்தெரு, Ms-12 (ஏப்ரல் 74 முதல் டிசம்பர 75 வரை) ஏலத் தேதி, 28 12-79 பகல் 12 மணி ஆகிய மேற்படியார் கடைகளில் அடகு வைத்து மீடகப்படாத பொருள்களை குறிப்பிட்டுள்ள தேதிகளில் ரெவின்யூ அதிகாரி முன்னிலையில் அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம் தரம்சந்த் ஜெயின் அவர்கள் 150 சச்சிதானந்தம் தெரு, கொசப்பேட், Ms-12ல் ஏலம் போடுவார்.

# அமைச்சர் காளிமுத்து முழக்கம்

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

கொள்கையை இந்திரா காங்கிரஸ் ஒப்புக்கொண்டு விட்டதா?

என்ன கொள்கை?என்ன இலட்சியம்? அவர்களுக்கு இன்றைக்கிருப்பது ஒரே ஒரு கொள்கை! ஒரே ஒரு இலட்சியம் தான்.

தமிழகத்தில் மக்களின் நல்லாதரவைப் பெற்றுள்ள பெரியக்கமான அனைத்திந்திய அண்ணா திமுகவை வீழ்த்த இந்திரா காங்கிரசைப பயன்படுத்திக் கொள்ளக் கருதி நினைக்கிறார். புரட்சித்தலைவரின் செல்வாக்கைச் சிதைக்கக் கருணாநிதி உபயோகப்படமாட்டாரா என்று இந்திரா காந்தி நினைக்கிறார்.

காங்கிரஸ் கட்சி என்ன முன்பிருந்த மாதிரியா இருக்கிறது? அது உடைந்து சிதைந்து சின்னாபின்னமாகிவிடவில்லையா?

இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு இன்றைக்கு தேசிய முத்திரை கிடையாது. "காங்கிரஸ்-ஐ" என்கிறார்கள், "காங்கிரஸ்-யூ" என்கிறார்கள் "காங்கிரஸ்-கே" என்கிறார்கள்.

ஏ பி சி டி 26 எழுத்துக்களுக்கும் காங்கிரஸ் கட்சி உருவாகி இருக்கிறது.

(சிரிப்பு-கைதட்டல்)

அந்தக் காங்கிரசை வெற்றிபெற வைத்தால்- இந்தியாவில் ஜனநாயகத்தை இந்திரா காந்தி நடைமுறைப்படுத்துவார் என்று சாசரி அரசியல் அறிவுபடைத்த எவரும் நம்ப முடியாது

இப்போதே சர்வாதிகாரத்தின் தொனி இந்திராவின் வார்த்தைகளில் தென்பட ஆரம்பித்துவிட்டது, "சஞ்சய் காந்தியைப் பிடிக்காத எவருக்கும்கட்சியில் இடம் கிடையாது வெளியே போங்கள்" என்று விரட்டியடிக்கிறார்.

நந்தினி சத்பதி ரஜனி படேல், சித்தார்த்த சங்கர் ரே, தேவராஜ் அர்ஸ்- இப்படி சஞ்சய் காந்தியை எதிர்த்து வெளியே வந்தவர்களின் நீண்ட தொடர் பட்டியலே இருக்கிறது

இப்போதே அப்படி என்றால் இனி சஞ்சய்காந்தியை எதிர்த்து எவராவது பேச முடியுமா? இந்திரா காங்கிரஸ் வேட்பாளர்களின் பட்டியலையே சஞ்சய் காந்திதான் நிர்ணயிக்கிறார்.

கட்சியைத் தன் மகனுடைய சூத்தகைப் பொருளாக்கியிருக்கிற இந்திராகாந்தி பிரதமராகிவிட்டாரானால் நாட்டையும் மகனிடமே தத்தம் செய்து விடமாட்டார் என்பது என்ன நிச்சயம்?

## வம்சாவளி ஆட்சியா?

சமீபத்திலே சென்னைக்கு சஞ்சய்காந்தி வந்திருந்த போது இந்தியாவின் இளைய பிரதமரே வருக என்று வரவேற்பு வளைவு வைத்திருந்தார்கள்.

இந்தியாவை என்ன பரம்பரை பரம்பரையாக, கொடி வழிகுல வழியாக இவர்கள்குடும்பமே ஆட்சி செய்யப்பட்டாப் போட்டுக் கொடுத்து விட்டார்களா?

(பலத்த கைதட்டல்)

இந்திராகாந்தி, இந்திரா காந்தியின் மகன் சஞ்சய் காந்தி, சஞ்சய் காந்திக்கு அடுத்து அவரது மகன், அதற்கு அடுத்து அவரது பேரன், இப்படி சரித்திரத்திலே மௌரிய வம்சம் குப்த வம்சம், கில்ஜி வம்சம் மொகலாய வம்சம், அடிமை வம்சம் என்று குறிப்பிடுவார்களே அதுபோல இவர்கள் வம்சாவளியினரே அரசு கட்டிலில் அமர்ந்திருக்க நினைக்கிறார்களா?

(சிரிப்பு)

இந்திராகாந்தியின் எண்ணம் முன்பே உங்களுக்குத் தெரியாதா? தெரிந்திருந்தால் இப்படிப்பட்ட இந்திராவோடு எதற்காக நீங்கள் முன்பு கூட்டு வைத்திருந்தீர்கள் என்று நம்மைபார்த்து யாராவது கேட்கக்கூடும்.

1972-லே அண்ணா தி.மு கழகம் உதயமான போது அன்றைக்குத் தமிழகத்திலே அரசாச்சிக் கொண்டிருந்த கொடுமையான ஒரு சக்தியை, நீசத்தனமான சக்தியை, தமிழக மக்களின் வாழ்க்கையோடு விளையாடிக் கொண்டிருந்த கேவலமான சக்தியை சந்தித்துச் சமர்புரிந்து அழிக்க வேண்டிய நிலையில் நம் இயக்கம் இருந்தது.

## விவேக முடிவு

அருமபி வளர்ந்து வரும் ஓரியக்கம் ஒரே நேரத்தில் இரண்டு பகைகளோடு மோதுவது விவேகமாகாது என்பதால் தான் அப்போது காங்கிரஸ் கட்சியோடு உடன்பாடு வைத்திருக்க நேர்ந்தது.

அப்படியிருந்த போதிலும் இப்போது தி.மு க வினர்செய்திருப்பதுபோல இந்தா பிடியுங்கள் 23 இடங்களை என்று புரட்சித்தலைவர் இந்திராவின் கையிலே தூக்கிக்கொடுத்து விடவில்லை.

இவ்வாறு அமைச்சர் காளிமுத்து கூறினார்.

சென்னைவடக்கு மத்தியதெற்கு தொகுதிகள்

# தேர்தல் பிரச்சாரப் பணிக்குழு அறிவிப்பு

## தென்சென்னை வேட்பாளர் சுலோசனா சம்பத் நிகழ்ச்சிகளின் விபரம்:

27-12-79 காலை 8 மணி மயிலை தொகுதியில் வாக்காளர்களைச் சந்தித்தல்

27-12-79 பகல் 3 மணி சைதை தொகுதியில் வாக்காளர்களைச் சந்தித்தல்

28-12-79 காலை 9 மணி தி. நகர் பஸ் ஸ்டாண்ட் நிலையத்தில் சைக்கிள் ஊர்வலம் கலந்து கொள்ளுதல்

29-12-79 காலை 8 மணி மயிலை தொகுதியில் சைக்கிள் ஊர்வலம்-கலந்து கொள்ளுதல்

30-12-79 காலை 8 மணி சைதை தொகுதியில் சைக்கிள் ஊர்வலம் கலந்து கொள்ளுதல்

31-12-79 காலை 8 மணி திருவான்மியூரில் வாக்காளர்களைச் சந்தித்தல்

கே நிலவழகன்
தலைவர்
சென்னை வடக்கு மத்திய-தெற்கு தொகுதிகளின் தேர்தல் பிரச்சாரப்பணிக்குழு
சென்னை.



தேர்தல் பிரச்சாரப் பொதுக் கூட்டத்தில் புரட்சித்தலைவரின் கொள்கை முழக்கம் கேட்கத் திரண்டிருந்த லட்சோப லட்சம் மக்களும், தாய்மார்களும்.

## தேர்தல் பணிமனைகளை பி. டி. எஸ். திறந்து வைத்தார்

உசிலம்பட்டி, டிச. 26-- உசிலம்பட்டி தொகுதியில் பல்வேறு இடங்களில் தேர்தல் பணிமனைகளை அமைச்சர் பி. டி. எஸ். திறந்து வைத்தார்.

கண்ணனூர், முதலைக்குளம், கீழப்பட்டி, விக்கிரமங்கலம், கோவில்பட்டி, கீழ பெருமாள்பட்டி, செக்கான்கோவில்பட்டி, மேலப் பெருமாள்பட்டி, ரெட்டியப்பட்டி, அரசமரத்துப் பட்டி, எரவார்பட்டி, பாணுமூப்பன் பட்டி, கல்யாணிபட்டி, கல்லூத்தி, நல்லொச்சான்பட்டி, மகாலிங்கபுரம், பாரப்பட்டி, உத்தப்ப நாயக்கனூர், வெள்ளிமலைப்பட்டி, ஆகிய கிராமங்களில் தேர்தல் பணிமனைகளை அமைச்சர் பிடிஎஸ்திறந்துவைத்தார்

திண்டுக்கல் நாடாளுமன்ற வேட்பாளர் ராசன் செல்லப்பா உசிலம்பட்டி சட்டமன்ற வேட்பாளர் பி, கே. எம். முத்துராமலிங்கம் ஆகியோருடன் சென்று மக்களைச்சந்தித்து அமைச்சர் பி. டி. எஸ். வாக்குகளைச் சேகரித்தார்.

திருமங்கலம் கே. எம். கருப்பையா, அன்பு கே.சி. மாயன், வீரநயினுர், கே, என். வின்சென்ட் ராமன், ராமசாமி, நக்கீரன், கலைமன்னன், கோ. ராமநாதன் மற்றும் பலர் அவருடன்சென்றிருந்தனர்.

## ராசிபுரம் கழக வேட்பாளர் தீவிரவாக்குகள் சேகரிப்பு

ராசிபுரம், டிச. 26- ராசிபுரம் கழக வேட்பாளர் எஸ். அன்பழகன் வீடு வீடாக சென்று மக்களைச் சந்தித்து வாக்குகளை திரட்டிவருகிருர்.

கடலூர் நாடாளுமன்ற கழக வேட்பாளர் பாலா பழனூர், சின்னசேலம் சட்டமன்ற உறுப்பினர் எம். சுப்பிரமணியன் பரங்கிமலை, நாகராசன் ஆகியோரும் அவருடன் சென்று தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்தனர்.

மாடூர், வீரசோழபுரம், அரியபெருமானூர், ஆலத்தூர், மூராபாளையம் அகரம் பெருமானூர் சோளம்பட்டு, உளுந்தூர் பேட்டை, திருக்கோவிலூர் மற்றும் பல கிராமங்களுக்குச் சென்று வாக்குகளைத் திரட்டினர்.

சங்கராபுரம், சோளம்பட்டு, திருக்கோவிலூர், உளுந்தூர்பேட்டை, கள்ளக்குறிச்சி பொதுக்கூட்டங்களில் எம். சுப்பிரமணியன் எம். எல். ஏ., பரங்கிமலை நாகராசன், எகால் நடேசன் மற்றும் பலர் கலந்துகொண்டு பேசினர்.

# தென்னகம் முழுவதிலும் இந்திராவின் கட்சி தூக்கி எறியப்படும்

### அமைச்சர் காளிமுத்து முழக்கம்

**மதுரை, டிச, 26-வரவிருக்கின்ற 7-வது நாடாளுமன்றத் தேர்தலில் தமிழகம், ஆந்திரம், கேரளம், கருநாடகம் ஆகிய தென்னகம் முழுமையும் இந்திராவின் கட்சி ஒட்டுமொத்தமாகத் தூக்கி எறியப்படும் என்று அமைச்சர் காளிமுத்து கூறினர்.**

மேற்கு ராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகாசி, சாத்தூர், கோவில்பட்டி ஆகிய இடங்களில் நடைபெற்ற கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் தமிழக உள்ளாட்சித்துறை அமைச்சர் காளிமுத்து கலந்துகொண்டு பேசினர்.

அமைச்சர் காளிமுத்து பேசும் போது கூறியதாவது:

வரவிருக்கிற இந்தியப் பெரு நாட்டின் ஏழாவது நாடாளுமன்ற தேர்தலில் தமிழகத்தைப் பொறுத்த அளவில் அனைத்திந்திய அண்ணு தி. மு. கழகமும், ஜனதாப் பேரியக்கமும், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியும், மார்க்சிஸ்ட் இயக்கமும் இணைந்து ஓரணியை உருவாக்கியிருக்கிறது என்பதையும் இந்த அணிதான் நாட்டின் பிணி போக்கும் நல்லணி என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

இந்தத் தேர்தலின் தத்துவார்த்த அடிப்படையை-வரலாற்றுஅடிப்படையை நீங்கள் தெளிவாக உணர்ந்திருக்கக் கூடும்.

இந்தத் தேர்தல்தான் இந்தியத் துணைக்கண்டத்தின் எதிர்காலத்தைநிர்ணயிக்கப்போகும் தேர்தல் என்பதையும் இந்தியத் திருநாட்டில் ஜனநாயகம் நிலவுமா அல்லது சர்வாதிகாரம் கோலோச்சுமாஎன்பதை முடிவு செய்யப் போகும் தேர்தல் என்பதையும் நான் எடுத்துக் கூறவேண்டிய அவசியமில்லை.

கடந்த முறை நடைபெற்ற நாடாளுமன்றத் தேர்தலிலும் இந்திரா காங்கிரஸ் போட்டியிட்டது. தென்னுட்டில் பல இடங்களில் வெற்றியைப் பெற்றது. ஆனல்வடபுலத்தில் அந்தக் கட்சிக்குத் தோல்வியைத் தந்து ஜனதாவை ஆட்சிப் பீடத்தில் மக்கள் அமர்த்தினர்கள்.

கடந்த முறைதென்னுட்டில் இந்திரா கட்சிபெற்ற வெற்றிக்கு யாா யாா காரணமாக இருந்தார்களோ, அவர்களுடைய ஆதரவு இந்த முறை இந்திரா கட்சிக்கு இல்லை.

அன்றைக்கு ஆந்திரத்தில் இந்திரா கட்சிக்காக உழைத்த வெங்கல்ராவ்

இப்போது இந்திராவுக்கு எதிராக அணி திரண்டு நிற்கிருர்.

கடந்த முறை கேரளத்தில் இந்திய கம்யூனிஸ்ட் கட்சி நண்பர்கள் இந்திராவை ஆதரித்தனர். இன்று எதிரணியில் இருக்கிருர்கள்.

கருநாடகத்தில் இந்திரா காங்கிரஸ் பெற்ற வெற்றிக்குக் காரணமாக இருந்த தேவராஜ் அர்ஸ் இப்போது இந்திரா காங்கிரசுக்கு எதிராகக் கொடி போட்டுக் கொண்டு நிற்கிருர்.

சென்ற முறை தமிழகத்தில் இந்திரா காங்கிரஸ் அடைந்த வெற்றியின் ஆதாரமாக இருந்த நம்முடைய புரட்சித்தலைவர் இப்போது தமிழகத்தில் இந்திரா காங்கிரஸ் அணியைத் தோற்கடித்தே தீருவேன் என்று சூளுரைத்துச் சுடர்முகம் தூக்கி நிற்கிருர்.

(பலத்த கைதட்டல்)

ஆக, - தமிழகம், ஆந்திரம், கேரளம், கருநாடகம்- இப்படித் தென்னகம் முழுமையும் இந்திராவின் கட்சி ஒட்டுமொத்தமாகத் தூக்கி எறியப்பட்டுத் துடைத்து வீசப்படவிருக்கிறது,

(கைதட்டல்)

இந்தச் சூழ் நிலையில் தான் சிலர் கனவு காண்கிருர்கள். இந்த முறை இந்திரா காந்திமீண்டும் பிரதமராக வந்து விடுவார் என்றும் வந்தவுடன் தமிழகத்தில் அனைத்திந்திய அண்ணு தி. மு. கழக ஆட்சியைக் கலைத்து விடுவார் என்றும் கடந்த முறை ஊழல் முத்திரை குத்தி உதைத்து விரட்டப்பட்ட கருணாநிதிகட்சியினர் கனவுலக சஞ்சாரிகளாக உலவுகிருர்கள்.

(சிரிப்பு)

அவர்கள் அமைத்திருக்கிற கூட்டே மிகவும் விநோதமான கூட்டு.

''நீங்கள் தான் அடுத்த பிரதமர்'' என்று இந்திராவைப்பார்த்துக் கருணாநிதி கூறுகிருர்: நீங்கள் தான் அடுத்த முதல்வர்-என்று கருணாநிதியைப் பார்த்துச் சொல்கிருர் இந்திரா காந்தி.

கனவிலேயே அவர்கள் இரண்டு பேரும் பிரதமராகவும் முதலமைச்சராகவும் உலாவந்து கொண்டிருக்கிருர்கள்.

(பலத்த சிரிப்பு)

''இது கொள்கைக் கூட்டு இலட்சிய உறவு என்று அவர்கள் கூறுகிருர்கள் எந்தக்கொள்கையின் துணையில், இலட்சியத்தின் அடிப்படையில் கருணாநிதி இந்திரா காங்கிரசின் உறவைப் பெற்ருர்?

நான் கேட்கிறேன். இந்திரா காங்கிரசின் கொள்கையை தி. மு. கழகம் ஏற்றுக் கொண்டதா? தி. மு. கழகத்தின் மாநில சுயாட்சிக்

(2ம்-பக்கம் பார்க்க)

அமைச்சர் கே. ஏ. கே

## 32 மணி நேரம் இடைவிடா தேர்தல் பிரச்சாரம்

சென்னை, டிச. 26- தமிழக கூட்டுறவுத்துறை அமைச்சர் கே. ஏ. கே. செங்கல்பட்டு நாடாளுமன்ற தொகுதியில் 32 மணி நேரம் இடைவிடாமல் தேர்தல் பிரச்சாரம் செய்தார்.

செங்கல்பட்டு நாடாளுமன்ற தொகுதி கழகவேட்பாளர் இரா. மோகனரங்கத்தை ஆதரித்து செங்கல்பட்டு, திருப்போரூர், காஞ்சிபுரம், மாமல்லபுரம், மாணம்பதி, கேளம்பாக்கம், கூடுவாஞ்சேரி, சிங்கப்பெருமாள்கோவில், ஆகிய பகுதிகளில் 100-க்கு மேற்பட்ட தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் கலந்து கொண்டார்.

அமைச்சர் மொத்தம் 32 மணி நேரம் தேர்தல் பிரச்சாரம் செய்தார். அவருடன் வேட்பாளர் இரா.மோகனரங்கம், பேரவைச்செயலர் ஆனூர் ஜெகதீசன், காஞ்சிபுரம் சட்டமன்ற உறுப்பினர் பாலாஜி ஆகியோர் சென்றனர்.

அவர் ஒரு கூட்டத்தில் பேசிக்கொண்டிருந்தபோது பக்கத்து தெருவில் கழக தொண்டர் கோபால் என்பவர் கத்தியால்குத்தப்பட்டார்.

உடனே அவர் ரத்தம் சொட்டச், சொட்ட மேடைக்கு அழைத்து வரப்பட்டார். அமைச்சர் அவரை மருத்துவ மனைக்கு அனுப்பி சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். இதையறிந்து பொதுமக்களும் தொண்டர்களும் கொதிப்படைந்தனர். அமைச்சர் அவர்களை சமாதானம் செய்தார்.

சென்னை நகர ஷெரீபாக எ. பின சுந்தரசன் தமிழக ஆளுநர் பட்வாரி முன்னிலையில் பதவிப் பொறுப்பேற்ருர்.

"நல்ல திட்டங்களை செயல்படுத்துகிருர்"

# புரட்சித்தலைவருக்கு வெளிநாட்டிலுள்ள தமிழர்கள் பாராட்டு

### துணை சபாநாயகர் திருநாவுக்கரசு தகவல்

**சென்னை, டிச.26-தமிழ் நாட்டில் கிராம மக்களின்முன்னேற்றங்களுக்காக திட்டங்களை தீட்டி செயல்படுத்தி வரும் முதல்வர் புரட்சித்தலைவருக்கு வெளிநாடுகளில் உள்ள தமிழர்கள் பாராட்டு தெரிவித்தார்கள் என்று வெளிநாடு சென்று திரும்பிய துணைசபாநாயகர் திருநாவுக்கரசு கூறினர்.**

சர்வதேச நாடுகளின் நாடாளுமன்ற சங்கத்தினுடைய 25-வது மாநாடு நியூசிலாந்து நாட்டில் நடைபெற்றது. தமிழ்நாடு அரசின் சார்பில் தமிழக சட்டப் பேரவை துணை சபாநாயகர் எஸ். திருநாவுக்கரசு இந்த மாநாட்டில் கலந்துகொண்டார்.

அதன்பிறகு ஆஸ்திரேலியா, ஜப்பான், ஹாங்காங், தாய்லாந்து, மலேஷியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் சுற்றுப்பயணம் செய்து, நாடாளுமன்றம், மற்றும் சட்டமன்றம் ஆகியவைகளின் நடைமுறைகளை அறிந்தார்.

சென்னை திரும்பிய துணை சபாநாயகர் திருநாவுக்கரசு நிருபர்களுக்கு பேட்டியளித்தார். அப்பொழுது அவர் கூறியதாவது:

## அக்கறை அன்பு

''ஜப்பான்-ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் நாடாளுமன்ற நடவடிக்கைகளை டெலிவிஷனில் திரையிட்டு காட்டுகிருர்கள். இவற்றை மக்கள் பார்ப்பதன் மூலம் ஒரு உறுப்பினர் எப்படி செயல்படுகிருர் என்று மக்கள் கவனிக்க முடிகிறது. இதன் மூலம் உறுப்பினர் அமளியில் ஈடுபடுவது போன்ற சம்பவங்கள் தவிர்க்கப் படுகின்றன. இந்த முறையை தமிழ் நாட்டில் பின் பற்றினல் நல்லதாக இருக்கும்.

ஆஸ்திரேலியாவில் ஒவ்வொரு உறுப்பினருக்கு முன்பும் 'மைக்' கிடையாது. சபாநாயகருக்கு முன்னல் தனியாக ஒரு ஒலி பெருக்கி 'மைக்' வைக்கப்பட்டுள்ளது. உறுப்பினர்கள் எழுந்து வந்து அதன் முன்னல் நின்று தான் பேசவேண்டும். அமைச்சர்களும் அதே 'மைக்' முன்னல் வந்து தான் பேசவேண்டும். அப்படி ஒரு முறை அந்நாட்டில் அமலில் உள்ளது.

மேல்நாடுகளில் உள்ள தமிழர்கள் எல்லாம் தமிழக அரசின் நடைமுறைகளில் ஆர்வம் காட்டுகிருர்கள், தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் மீது அவர்கள் மிகுந்த அக்கறை காட்டுகிருர்கள்.

## வளர்ச்சி திட்டம்

குறிப்பாக மலேஷியா, சிங்கப்பூர் ஆகிய நாடுகளில் உள்ள தமிழர்கள் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரிடம் மிகுந்த அக்கறை காட்டுகிருர்கள்.

தமிழ்நாட்டில் வேலைக்கு உணவுத் திட்டம், கிராமங்களில் தொழில் வளர்ச்சி, கிராமங்களுக்கு சாலை வசதி, கிராமங்களுக்கு பஸ் வசதி, கிராமங்கள் தோறும் குடிநீர்த் திட்டம் ஆகியவற்றை தமிழக அரசு செயல்படுத்தி வருகிறது, இந்த திட்டங்களை எல்லாம் செயல்படுத்தி வரும் தமிழக முதல்வர் புரட்சித்தலைவருக்கு அவர்கள் பாராட்டு தெரிவித்தார்கள்.

தமிழ்நாட்டில் இருந்து கலைநிகழ்ச்சிநடத்துவதற்கு வரும் நடிகர்கள் சிங்கப்பூர், மலேஷியா ஆகிய நாடுகளில் மதுக் கம்பெனிகளிடம் பணம் வாங்கிக் கொண்டு மதுவிற்பனைக்கு நூற்றுக்கணக்கான மக்கள் முன் பிரச்சாரம் செய்கிருர்கள். இது எங்களுக்குத் தலை குனிவையும், கேவலத்தையும் ஏற்படுத்துகிறது என்று மலேஷியா-சிங்கப்பூரில் வாழும் தமிழர்கள் வேதனையோடு தெரிவித்தார்கள்.

முதல்வரிடமும், தென்னிந்திய நடிகர் சங்கத்தாரிடமும் சொல்லி, கலைநிகழ்ச்சிகளில் மட்டும் கலந்து கொண்டுவிட்டு போகும்படி வற்புறுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டனர். இதை தென்னிந்திய நடிகர் சங்கம் கவனிக்கவேண்டும், தமிழக முதல்வர் புரட்சித்தலைவரிடமும் மலேஷியா, சிங்கப்பூர் தமிழர்களின் வேண்டுகோளை தெரிவிப்பேன்''

இவ்வாறு திருநாவுக்கரசு நிருபர்களிடம் கூறினர்.

வெளிநாடு சென்று திரும்பிய துணை சபாநாயகர் எஸ். திருநாவுக்கரசுவுக்கு அமைச்சர் ராகவானந்தம் மாலை அணிவித்து வரவேற்ருர்.

# 60 கோடி மக்களை அவலத்திற்கு ஆளாக்கிய 'சர்க்காரியா-ஷா' கமிஷன்கள் கூட்டு உலாவாம்! வெட்கமில்லையா?

## ஊர்ப் பணத்தை கொள்ளை அடித்து அண்ணாசாலையில் 5 அடுக்கு மாளிகை கட்டிய லஞ்சத் திருடன்

## சிவப்பு விளக்கு விபச்சாரியா கற்பு பற்றி கதை பேச வருவது?

# ஊர்ப்பண திருடன் கருணாநிதி ஊழல் பற்றி பேசலாமா?

## அமைச்சர் ஆர்.எம்.வீ. காட்டமான பதிலடி

சென்னை, டிச. 26-சிவப்பு விளக்குப்பகுதியில் வாழும் பெண், பத்தினித்தன்மை, கற்பு பற்றி பேசலாமா? ஊர்ப் பணத்தைக் கொள்ளை அடித்து அண்ணாசாலையில் ஐந்தடுக்கு மாடிகள் கட்டிக்கொண்ட பேர்வழிகள் ஷெரீப் தேர்ந்தெடுக்கப்பட்டதில் ஊழல் என்று ஊரை ஏமாற்ற பொய் சொல்லலாமா என்று அமைச்சர் ஆர். எம். வீ. காட்டமாகக் கேட்டார்.

சென்னை நகர ஷெரீபாக தேர்ந்தெடுக்கப்பட்ட என் பி சுந்தரேசனுக்கு மக்கள் மன்றம் சார்பில் வரவேற்பும் பாராட்டும் அளிக்கப்பட்டது.

விழாவுக்கு ஆளுநர் பிரபுதாஸ் பட்வாரி தலைமைவகித்தார். எஸ். வி. நரசிம்மன் வரவேற்றுப் பேசினார்.

இந்த விழாவில் கலந்து கொண்டு அமைச்சர் ஆர். எம். வீ. பேசுகையில்கூறியதாவது:

அதிகாரம் கையில் இருப்பதால் யாரை வேண்டுமானாலும் ஷெரீபாக நியமித்துக் கொள்வோம் என்று கூறுகின்ற அரசு புரட்சித்தலைவர் அரசல்ல. ஷெரீப் தேர்வு குறித்து ஒரு தவறான கருத்து வெளியிடப்பட்டு உள்ளது அதற்கு பதில் கூற வேண்டிய நிலையில் நான் இருக்கிறேன்.

தமிழ் நாட்டில் 7 ஆண்டு காலம் முதலமைச்சராக இருந்த இப்போது எதிர்க்கட்சித் தலைவராக இருக்கும் ஒருவரின் பத்திரிகை, ஷெரீப் தேர்வு பற்றி ஒரு கருத்து வெளியிட்டு இருக்கிறது.

ஷெரீப் பதவி என்பது கோபுரத்தின்மேல்வைத்து இருக்கின்ற அலங்கார பொம்மைபோன்றது.

ஷெரீப்பாக வருகின்றவர் மக்களுடன் இணைந்து பணி செய்து அப்பதவியை மக்களின் கவனத்திற்கு உரியதாக்க வேண்டும்.

ஷெரீப் பதவிக்கு பல புதிய அதிகாரங்கள் கொடுக்க வேண்டும் என்று இங்கு கூறினார்கள். என்னென்ன பணிகள் ஷெரீப்புக்கு தரலாம் என்பது குறித்து ஏ.எம். ராமசாமி ராமகிருஷ்ணன் ஆகியோர் அரசுக்கு ஆலோசனை வழங்க வேண்டும்.

அரசுக்கு எல்லா அமைச்சர்களும் நெருக்கம் உள்ளவர்கள்தான். யாரும் ஒதுங்கிய நிலையில் இருப்பவர்கள் அல்ல. கடந்த 7 ஆண்டு காலத்தில் ஒருவர் முதலமைச்சர் பொறுப்பில் இருந்தார். அப்போது முதலமைச்சருக்கு நெருக்கமான அமைச்சர்கள் வேண்டாத அமைச்சர்கள் என்ற வேறுபாட்டு நிலை இருந்தது உண்மைதான் ஆனால் அப்படிப்பட்ட நிலை இன்று இல்லை.

### நாணயம் இல்லாதவர்

புகழ்பெற்ற யாரேனும் இருந்தால்தான் ஷெரீப் பதவி மக்களுக்கு தெரிகிறது. இந்த நிலை மாறி ஷெரீபாக வருகின்றவர்கள் மக்களின் தொண்டர்களாக மாறவேண்டும்-

பல பெரியவர்கள் சமூக விவகாரங்களில் இருந்து ஒதுங்கி இருப்பதால் நல்ல ஒழுக்கம் உள்ளவர்கள் பொது வாழ்வை விட்டு ஒதுங்கி விடக்கூடிய நிலை ஏற்படுகிறது.

முன்னாள் முதலமைச்சரின் பத்திரிகை 5 லட்சம் ரூபாய் என்று ஷெரீப் பதவி ஏலம் விடப்பட்டதாகத் தெரிகிறது என்று எழுதி இருக்கிறது.

நாணயம், ஒழுக்கம் அற்றவர்கள்தான் இப்படி எல்லாம் எழுதி இருக்கிறார்கள். சாக்கடையை வாரி வீசி, இருக்கிறார்கள். சமுதாயத்தில் இந்த சாக்கடையில் தான் கொசுக்கள் உற்பத்தியாகின்றன. அவைகளினால் யானைக் கால் போன்ற வியாதிகள் சமுதாயத்தில் பரவுகின்றன.

### மனிதனை கடிக்க

ஒழுக்கம் உள்ளவர் ஜனநாயக நாட்டில் அரசியலைவிட்டு விலகினால் அரசியலே சாக்கடையாகி விடும் அதிலே நல்லவர்களும் விழுந்துவிடவேண்டி இருக்கும். சிவப்புவிளக்கு பகுதியில் இருந்து பேசும் பேச்சு இது. இதுபண்பாடு உள்ள தமிழகம் அல்லவா?

பம்பாய் சிவப்பு விளக்கு பகுதியில் இருந்து வந்த பெண் பத்தினித் தன்மையைப்பற்றியும் கற்புத் தன்மைபற்றியும் பேசுவதா?

சமுதாயத்தில் விஷத்தைப்பரப்பும் வேலை நடத்தலாமா? ஆட்டைக் கடித்து நாட்டைக் கடித்து இறுதியில் மனிதனையே கடிக்க வந்து விட்டார்கள். இதனை அனுமதிக்கலாமா?

நெருப்பு எங்கே பிடித்துக் கொண்டு இருக்கிறது என்று கருதாதீர்கள். அது இங்கே வருவதற்கு அதிக நேரம் பிடிக்காது.

சீழ் உள்ள புண்ணை அறுத்தால்தான் விமோசனம் கிடைக்கும். விஷத்தைப் பரப்பும் நிலையினை அனுமதிக்கக்கூடாது! விஷத்தைச் சமுதாயத்தில் பரப்புவதன் மூலம் அவர்கள் தங்களின் பரம்பரை வழக்கத்தை வெளிப்படுத்திக் கொள்கிறார்களா?

விவகாரங்கள் வரும் போது "நமக்கென்ன?" என்று பெரியவர்கள் இருந்துவிடக் கூடாது. அக்கறைஎடுத்துக் கொள்ள வேண்டும். ஊர்ப் பணத்தைக் கொள்ளையடித்து அண்ணாசாலையில் 5 அடுக்கு மாடி கட்டிக் கொண்டவர்கள் இப்போது ஊழலைப் பற்றிக் கூறுகிறார்கள். இதனைப் பற்றியெல்லாம் நாட்டில் உள்ள பெரியவர்கள் சிந்திக்க வேண்டும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. கூறினார். இறுதியில் சுந்தரேசன் பாராட்டுக்கு நன்றி கூறினார்.

### அமைச்சர் குழந்தைவேலு சூறாவளி சுற்றுப்பயணம்

தமிழக வேளாண்மை நீர்ப்பாசனத்துறை அமைச்சர் குழந்தைவேலு பொள்ளாச்சி நாடாளுமன்றத் தொகுதியில் அடங்கியுள்ள 6 சட்டமன்றத் தொகுதிகளிலும் கிராமம்கிராமமாகசென்று கழக வேட்பாளர் எம். நடராஜனுக்காக ஆதரவு திரட்டுகிறார். இதற்காக அவர் இன்று முதல் ஜனவரி 4-ஆம் தேதிவரை 10 நாட்களுக்கு பொள்ளாச்சி தொகுதியில் சூறாவளி சுற்றுப்பயணம் மேற்கொள்கிறார் அமைச்சர் குழந்தைவேலு சுற்றுப்பயண விவரம் வருமாறு:-

உடுமலைப் பேட்டைத் தொகுதி 26, 27-12-79 பொள்ளாச்சி 28, 29-12-79 வால்பாறை 30. 31-12-79 கிணத்துக் கடவு, 1-1-80 பொங்கலூர் 2-1-80 தாராபுரம் 3, 4-1-79

அமைச்சரின் சூறாவளிச் சுற்றுப்பயணத்தில் கழக கொள்கை பரப்புச் செயலாளர் திருப்பூர் மணிமாறன் எம்எல்ஏ கோவை மாவட்ட அமைப்பாளர் கோவைத்தம்பி ஆகியோர் கலந்து கொள்வார்கள்.



### புரட்சிமணி தீவிர தேர்தல் பிரச்சாரம்

சென்னை, டிச. 26- "அண்ணாகதிர்" இதழ்ஆசிரியரும் கழக முன்னணிப் பேச்சாளர்களில் ஒருவருமான புரட்சி மணி மத்திய சென்னையில் தீவிர தேர்தல் பிரச்சாரம் செய்து வருகிறார்.

அவருடன் நுங்கை மாறன் உள்பட திரளான கழக, மன்ற, மாணவச் செயல் வீரர்கள் வீடு வீடாகச் சென்று மக்களைச் சந்தித்து பகலில் வாக்குகள் சேகரித்து வருகின்றனர். இரவில் பல பொதுக் கூட்டங்களில் புரட்சி மணி, நுங்கை மாறன் ஆகியோர் பேசி வருகின்றனர்.

### காரைக்குடி

காரைக்குடி செஞ்சைத் திடலில் செ. கமால் முகைதீன் தலைமையில் பிரும்மாண்டமான கழக அணி தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டம் நடந்தது எம். கல்யாணசுந்தரம், காளியப்பன் எம். எல். ஏ. பழ. கருப்பையா, காசிநாதன், விஜயராகவன், குறள்பித்தன், சுப்புலட்சுமி, பெலிக்ஸ் மகாலிங்கம் மற்றும் பலர் பேசினர்.

பதவிப் பசியால்

### மானம் கெட்ட ஜென்மம் கருணாநிதி

கருணாநிதிக்கு இப்போது "பதவிப் பசி" ஏற்பட்டு இருக்கிறது. அந்தப் பசியால்தான் மானம், கொள்கை எல்லாம் கருணாநிதியிடம் இருந்து மறைந்து போயிற்று.

'பதவிப் பசியினால்'

கொள்கைகளை பறக்கவிட்டுவிட்டு இந்திராவுடன் வெட்கம் கெட்டுப் போய் கருணாநிதி கூட்டுச் சேர்ந்து இருக்கிறார்.

-மார்க்சிஸ்ட் தலைவர்
பி. ராமமூர்த்தி
(காஞ்சிபுரம் பொதுக்கூட்டம்)

### கேள்வி-பதில்

கேள்வி: மானம் பற்றி அடிக்கடி இப்போது கருணாநிதி பேசுகிறாரே?

பதில்: தன்னிடம் இல்லாததைப்பற்றிப் பேசுவதுதான் கருணாநிதியின் பழக்கம்.

### ஓட்டேரி

27-12-79 அன்று மாலை 6 மணிக்கு ஓட்டேரி, கிருஷ்ணதாஸ் ரோடு, பூங்கா அருகே துரைராஜ் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் ஆர். எம். வீ. தேங்காய் சீனிவாசன், வை. பெருமாள், ஜப்பார், சி. ஜெயபால், ஏ.டி. தாஸ், காட்டையா மற்றும் பலர் பேசுவர்.

### இந்திராநகர்

27-12-79 அன்றுஇரவு 7 மணிக்கு சென்னை 149வது வட்டம் இந்திராநகர் வாட்டர் டாங்க் அருகே நடக்கும் கழகத் தேர்தல் பிரச்சாரப் பொதுக்கூட்டத்தில் பேசுவோர்- தேங்காய் சீனிவாசன் டி. கே. கபாலி எம்.எல்.ஏ. பி. டி. ராகவன், வேட்பாளர் கலைசெழு சம்பத் மற்றும் பலர்.

### புதுப்பேட்டை

26-12-79 இன்று மாலை 7 மணிக்கு சென்னை 123-வது வட்டம், புதுப்பேட்டை, பி.வி. கோவில் தெருவில் மத்திய சென்னை வேட்பாளர் பா. ராமச்சந்திரனை ஆதரித்து நடக்கும் கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டத்துக்கு கே. மாசிலாமணி தலைமை வகிக்கிறார். தேங்காய் சீனிவாசன், பா. ராமச்சந்திரன், ஜேப்பியார், ராமகிருஷ்ணபாபு, ப. அங்கமுத்து, த. சதானந்தம், மு. பச்சையப்பன், தீனதயாளன், ஏ. டி. தயாளன், கே. எஸ். தங்கவேலு, டி. ஏ. பிச்சைக்கண்ணு மற்றும் பலர் பேசுகின்றனர்.

### திருவெறும்பூர்

27-12-79 வியாழன் மாலை 6 மணிக்கு திருவெறும்பூர், சிரணி அரங்கில் டி. எம். பாஷா தலைமையில் பேசுவோர்: எம் கல்யாணசுந்தரம், வேட்பாளர் டி. கே. ரெங்கராஜன், எஸ். அல்போன்ஸ் ராஜ், மருதுநல்லதம்பி, ஜி. எம். யாகூப், ஏ. எம். சப்தரிஷி, ராமச்சந்திரன், கே. முகமதுஅலி, மாசிலாமணி டி. எம். தங்கையன், கே. நாகம்மாள், கே முனியாண்டி, பி. ராமு, சுப்பிரமணியன் மற்றும் பலர்.

### சவாலை சந்திக்காமல் ஓடும் கருணாநிதி

"சுப்ரீம் கோர்ட் நீதிபதி எங்கே? கோர்ட்டுக்கு வா பார்க்கலாம்" என்றெல்லாம் கருணாநிதி பேசி வருகிறார். நான் அந்தச் சவாலை ஏற்று கோர்ட்டுக்கு சென்று இருக்கிறேன்,

ஆனால், கருணாநிதியின் நிலைமை என்ன? கோதுமை பூச்சி மருந்து ஊழல் வழக்கா? எவை என்றாலும் அதனைச் சந்திக்க வழக்கா? எவை என்றாலும் அதனைச் சந்திக்க மறுத்துவிட்டு சுப்ரீம் கோர்ட்டுக்கு கருணாநிதி ஓடிக்கொண்டிருக்கிறார்.

-புரட்சித்தலைவர்
(நெல்லை கூட்டத்தில்)

"கம்யூனிஸ்டைதாக்காதே! அ.தி.மு.க. அணிக்குவரும்" என்று கருணாநிதி மித்திரபேதம்

# கம்யூனிஸ்ட் கட்சி வெற்றிக்கு தி.மு.க. உழைக்கத் தயாரா?

## அமைச்சர் காளிமுத்து அறைகூவல்

மதுரை, டிச. 26- கம்யூனிஸ்ட் அணி தி. மு. க. பக்கம் வரும். ஆகவே கம்யூனிஸ்டுகளை தாக்கிப் பேசாதீர் என்று கருணாநிதி கூறுகிறாராம். அப்படி என்றால் கட்சி தலைமைகட்டளையை ஏற்றுகம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் வேட்பாளர்கள் வெற்றிக்கு தி.மு.க.வினரே பாடுபட வாருங்கள் என்று அமைச்சர் காளிமுத்து கேட்டுக் கொண்டார்

மதுரை நாடாளுமன்றத் தொகுதியிலுள்ள அவனியாபுரத்தில் நேற்று (25ந்தேதி) காலை நடைபெற்ற அனைத்திந்திய அண்ணா திமுகழக கூட்டணி செயல் வீரர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு உள்ளாட்சித் துறை அமைச்சர் காளிமுத்து பேசியதாவது:

இந்த நாடாளுமன்றத் தேர்தல் களத்தில் அனைத்திந்திய அண்ணா திமுக அணியிலே உள்ள கம்யூனிஸ்டுகட்சிகளை திமுக்வினர் யாரும் தாக்கிப்பேச வேண்டாம் என்றும் அவர்கள் ஜனவரி 6-ம் தேதிக்குப் பிறகு திமுகவோடு சேர்ந்து அனைத்திந்திய அண்ணா திமுக அரசை எதிர்த்துப் போராட இருக்கிறார்கள் என்றும் இந்த அணியிலே மித்திர பேதத்தை உண்டாக்க கருணாநிதி பேசுகிறார்.

அப்படியானால் ஜனவரி 6-ந்தேதிக்கு பிறகு தி. மு. க. வோடு சேர்ந்து அனைத்திந்திய அண்ணா தி.மு.க அரசைஎதிர்த்துப் போராட இருக்கிற கம்யூனிஸ்டு கட்சிகளுக்கு எதிராக நிறுத்தப்பட்டிருக்கிற திமுக வேட்பாளர்களை வாபஸ் வாங்கிக் கொண்டு கம்யூனிஸ்டு வேட்பாளர்களை ஆதரிக்க கருணாநிதி தயாரா?

### மாபெரும் துரோகம்

கம்யூனிஸ்டுகளை எதிர்த்து காங்கிரஸ்போட்டியிடக்கூடிய தொகுதிகளிலும் அரிவாள் சுத்தியல் நட்சத்திர சின்னத்துக்கும் கதிர் அரிவாள் சின்னத்துக்கும் கருணாநிதி வாக்கு கேட்கத் தயாரா?

ஆகவே மதுரையிலுள்ள திமுக நண்பர்களே உங்கள் தலைவர் மறைமுகமாகச் சொல்லி விட்டார். எனவே இந்த க்ஷணம் முதல் அரிவாள் சுத்தியல் நட்சத்திர சின்னத்திற்கு வாக்கு கேட்டு தோழர் ஏ. பாலசுப்பிரமணியத்தை வெற்றிபெற செய்ய தயாராகுங்கள். களத்தில் இறங்குங்கள்.

இல்லாவிட்டால் தலைவனின் கட்டளையை மீறிய மாபெரும் துரோகத்துக்கு நீங்கள் ஆளாகி விடுவீர்கள்.

இவ்வாறு அமைச்சர் கா. காளிமுத்து கூறினார்.

# குன்றத்துவிளக்கு

கா. காளிமுத்து

# ஒரே அணி! ஒரே இரத்தம்! ஒரே இலட்சியம்!

ஆளுங்கட்சிக்கும் எதிர்க்கட்சிக்குமுள்ள உறவு மாப்பிள்ளைக்கும் மாப்பிள்ளைத் தோழனுக்குமுள்ள உறவைப் போலிருக்க வேண்டும்'' எனப் பேரறிஞர் அண்ணா ஒருமுறை குறிப்பிட்டார்கள்,

குறைகளைச் சுட்டிக்காட்டுவதில் நயமும், நயத்துக்கு நாகரிகமும் இருக்கவேண்டும் என்பதைத்தான் நயமான அந்த உவமையின் மூலம் அண்ணா விளக்கினார்.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகத்தோடு இந்தக் களத்திலே அணி சேர்ந்துள்ள ஜனதா, கம்யூனிஸ்டு இயக்கங்கள் ஆளுங்கட்சியின் துதிபாடகர்கள் அல்ல.

எனினும் கலைஞர் கட்சியைப்போல் அனைத்திந்திய அண்ணா தி.மு.க. அரசை குடைசாய்த்துவிட்டு கொலுமண்டபத்தில் முந்திக்கொள்ள வேண்டுமெனும் இச்சையின் காரணமாக கொச்சைத்தனமான இலாபவேட்டை அரசியலை நடத்துபவைகளும் அல்ல.

ஒரு குறிப்பிட்ட கொள்கையின் வழி நின்று ஜனநாயக வழியில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசை எந்த அளவு விமர்சிக்கலாம் என்பதைத் தெரிந்து கொண்டு அந்த விளிம்பு மாறாமல் நிற்கும் இலக்கணம் மீறாத கவிதைகள்தான் இந்த இயக்கங்கள்.

கடந்த முறை சட்டமன்றத்தில் கலைஞர் கட்சி கண்டனத் தீர்மானம் கொண்டுவந்து கண்மூடித்தனமாக அரசைத் தாக்கியது.

பதவி வேட்கையின் காரணமாக சட்டமன்றத்தில் படமெடுத்து நின்ற அந்த கண்டனத் தீர்மானத்தை ஜனதா கட்சி ஆதரிக்க வில்லை.

**மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியும் ஆதரிக்கவில்லை.**

**இந்திய கம்யூனிஸ்டு கட்சி நடுநிலை வகித்ததே தவிர என்னதான கலைஞர் கண்சிமிட்டியும் அவர் பக்கம் சாயவில்லை.**

அரசியல் அழுக்கேறிய பேர்வழிகளையும் 'அழுகல்' நபர்களையும் உள்ளடக்கிய கலைஞர் கட்சியை விட்டு கூட்டத்தை ஒதுங்கி நின்று இந்த இயக்கத்தை தூய ஜனநாயகத்தை காத்தன.

ஆனால் இந்திரா காங்கிரஸ்-கலைஞர்கட்சியோடு கூடி **தன் சுயசொரூபத்தை அப்போதே காட்டிவிட்டது.**

தமிழகத்தில் எப்படிப்பட்ட அரசியல் அணிகள் அமையப்போகின்றன என்பதை பனித்துளியில் பிரதிபலிக்கும் பனைமரம் போல அந்தக் கண்டனத் தீர்மானத்தில் எடுக்கப்பட்ட வாக்கெடுப்பு தெள்ளிதின் விளக்கிவிட்டது.

ஜனநாயகத்தை மதிக்கிற கட்சிகள் ஒன்றை ஒன்று மதிக்கிற கட்சிகள்தான் ஜனநாயகத்தை காக்க ஒன்றாகச் சேர்ந்திருக்கின்றன.

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் இதுவரை ஒவ்வொரு தேர்தல் களத்திலும் ஜனதாவுக்கு எதிரணியிலேயே நின்று வந்திருக்கிறது. எனினும் மத்தியில் இயங்கிய ஜனதா அரசு தமிழக அரசின் மீது பகைமையையோ, குரோதத்தையோ, வெறுப்பையோ பொழிந்ததில்லை.

'இந்திரா காந்தித்தனமான' பழிவாங்கும் நடவடிக்கையை அது மேற்கொண்டதில்லை.

கருத்து வேறுபாடுகள்தான் ஜனநாயகத்திற்கு வலிமை சேர்ப்பது என்ற கருத்தை ஜனதா அரசு உதாசீனப்படுத்தவில்லை.

அந்த உயரிய பண்புதான் ஜனதாவுக்கும். அனைத்திந்திய அண்ணா தி மு. க. வுக்கும் அன்புப் பெருக்கத்தையும் நட்பு நெருக்கத்தையும் உண்டாக்கி இருக்கிறது.

ஜனதாவை கம்யூனிஸ்டு ஆதரிக்கலாமா என்றும், கம்யூனிஸ்டு கட்சிகள் இந்த தேர்தலுக்குப் பிறகு தி. மு. க. வோடு சேரும் என்றும் கூறி இந்த அணியில் பிணக்கை உண்டாக்கலாம் என கலைஞர் கருதுகிறார்.

கோள் மூட்டுவது, குடி கெடுப்பது, முடிச்சுப் போடுவது, முடிச்சு அவிழ்ப்பது இவைகளெல்லாம் கலைஞருக்கு கை வந்த கலைகள்.

கலைஞரின் இந்தக் 'கலை'களெல்லாம் இந்த அணியினரைத் தீண்ட முடியாமல் கலையுமே தவிர அவர் நினைப்பதெதுவும் நடக்காது.

மார்க்சிஸ்டு கம்யூனிஸ்டு கட்சியின் அருமைத்தலைவர்- மதுரை நாடாளுமன்ற முற்போக்கு அணியின் வேட்பாளர் தோழர் ஏ. பாலசுப்பிரமணியம்-கலைஞரின் இந்தப் பித்தலாட்ட பிரசாரத்துக்கு சரியான பதிலடி கொடுத்தார்.

"கலைஞரே! இந்த சில்லறை விஷமங்களை எல்லாம் இங்கே வைத்துக் கொள்ளாதீர்கள் எங்கள் அணியிலிருக்கிற ஜனதாவையோ இந்திய கம்யூனிஸ்டு கட்சியையோ, மார்க்சிஸ்டு கட்சியையோ, அனைத்திந்திய அண்ணா தி மு க வையோ தனித்தனியே பிரித்துத் தாக்கினாலும் அது எங்கள் அனைவரையும் தாக்குவதாகத்தான் பொருள். நாங்கள் இப்போது ஒரே கட்சி ஒரே இரத்தத்தின் இரத்தம் சர்வாதிகாரத்தைத்துடைத்தெறிவதே எங்கள் லட்சியம்!'' என அவர் குறிப்பிட்ட பின்பு கலைஞர் இந்த பிரித்தாளும் பணியைச் செய்வாரானால் அவரின் மதியீனத்தை எண்ணி சிரிப்பதைத் தவிர வேறு வழியில்லை.

'கருடா சவுக்கியமா? எனக்கேட்ட நாகப் பாம்பைப் போல இந்திரா காந்தியின் பக்கபலம் இருப்பதாகக கருதி கலைஞர் நம்மைகுசலம் விசாரிக்கிறார்.

இந்திரா காங்கிரசை கடந்த சட்டமன்றத் தேர்தலிலே எதிர்த்துத்தான் அனைத்திந்திய அண்ணா தி. மு. க அரசுப் பொறுப்பேற்றது. இந்திரா காங்கிரசின் துணை இருப்பதால் எல்லாம் கிடைக்கும் எனக்கருதி கலைஞர் துள்ளுகிறார்.

**அனைத்திந்திய அண்ணா தி. மு கழக ஜனதா- கம்யூனிஸ்டு கட்சிகள் ஓரணியில் நின்று சர்வாதிகாரத்தை சாய்த்தே தீரும்.**

**கலைஞர் கட்சியின் துள்ளலும் துடிப்பும் அத்தோடு அடங்கும்.**

**"புறமுதுகு காட்டி ஓடப்போகிற 'இந்திரா காங்கிரஸ்- கலைஞர் கட்சி அணி' அதுவரை ஆர்ப்பரிக்கட்டும்!**

**பொறுமை காட்டுவோம்!**

**புன்னகை காட்டுவோம்!**

**வாக்குகள் பெற்று வாகை சூடுவோம்!**

---

## இந்திரா மோதல்

(1ம் பக்கத் தொடர்ச்சி)

கூட்டத்தில் சிரிப்பொலி கேட்டது கருணாநிதி பேசிய நேரம் ஒரு நிமிடம. கூட்டத்தில் பேச மூப்பனார் மறுத்து விட்டார்

8. சென்னை விமான நிலையத்திலிருந்து காஞ்சிபுரத்திற்கே ஒரே நிலையில தங்கள் கூட்டணிக் காரர்களைக் கூட்டிச் செல்ல முடியாத இந்திரா, நாட்டில் நிலையான ஆட்சி வேண்டுமென்றால் எங்களுகக்கு ஓட்டுப் போடுங்கள் என்றா கூட்டத்தில் மவுனம் நிலவியது

9. இந்திரா முகம் எவர் முகத்திலும் ஈயாடவில்லை

10. ஒரே பரபரப்பான தேர்தல் நேரத்தில் இந்திராவின் இன்றைய நிகழ்ச்சிகள் அவர்களுக்கு அதிர்ச்சியானாலும் மக்களுக்கு நல்ல நகைச்சுவையாக அமைந்தது

## பெரம்பூரில் சைக்கிள் ஊர்வலம்

சென்னை, டிச. 26- வட சென்னை கழக வேட்பாளர் எம். எஸ். அப்துல் காதரை ஆதரித்து பெரம்பூர் பகுதியிலுள்ள 42-வது வட்டத்தில் ஜனநாயக முற்போக்குக் கூட்டணியினரின் மாபெரும் சைக்கிள் ஊர்வலம் நாளை 27-ந் தேதி (வியாழன்) பிற்பகல் 2 மணிக்கு நடக்கிறது.

ஊர்வலத்தில் கழகவேட்பாளர் எம். எஸ். அப்துல் காதர் கலந்து கொள்கிறார். சி. கிருஷ்ணசிங் தலைமை வகிக்கிறார் கோ. முனுசாமி, ஆ.சீனிவாசன் கே. செல்வராஜ் ஆகியோர் முன்னிலையில் இந்த ஊர்வலம் நடக்கிறது. சுப்பிராய முதலித்தெரு, ஓட்டேரி மணிக் கூண்டு அருகிலிருந்து ஊர்வலம் புறப்படுகிறது. கழகச்செயல் வீரர்களும் தோழமைக் கட்சிநண்பர்களும் திரளாக ஊர்வலத்தில் கலந்துகொள்ள வேண்டும் என்றுபெரம்பூர் பகுதி கழக அணித் தோழர்கள் தெரிவித்துள்ளனர்.

---

## ஊர்பண திருடா! வா... அப்படி!

கருணாநிதிக்கு வெறி உச்சத்தில் ஏறி விட்டது!

எப்படி?

ஊர்ப் பணத்தைச்சுருட்டி 45 கோடி ரூபாய்க்கு மேல் ஸ்தாவர ஜங்கமச் சொத்துக்களைச் சேர்த்துவிட்டவர் கருணாநிதி!

லஞ்ச ஊழல் வழக்கு கருணாநிதி மீது உள்ளது. மீண்டும் ஜனதா ஆட்சிக்கு வந்தால் கருணாநிதியின் லஞ்ச ஊழல் சொத்துக்கள் நாட்டு மக்களுக்குச் சொந்தமாகிவிடும்

இந்த அச்சத்தால் கருணாநிதி படுக்கையில் கிடந்து துடிக்கிறார். பிதற்றுகிறார்.

பிடிபட்ட திருடன் என்னசெய்வான்?

"அதோ திருடன்-அதோ திருடன்'' என்று தப்பிக்க முனைவான்?

கருணாநிதி பேர்வழி சாமானியப் பேர்வழியா? சும்மா புகுந்து விளையாடுகிறார்!

அப்பாவி தி மு க.தொண்டர்கள் ஒரு சிலருக்கு மட்டும் விவரம் புரியவில்லை, சொந்த சொத்துக்களை பாதுகாக்க கருணாநிதி இப்படி புலிவேஷம் கட்டி ஆடுகிறார் என்று!

சிறிது நாளில் விவரம் புரிந்துவிடும்!

அப்புறம் ஊர் பேசி...உலகம் பேசி... கருணாநிதியின் லஞ்சக் கயவாளித் தனத்தை தி. மு. க. தொண்டர்கள் பேசுவதை ரசித்துக் கேட்கலாம்.

கருணாநிதி நீர் ஊரை அடித்து கோடி கோடியாய் சேர்த்தது என்ன... என்ன... என்ன...?

டாக்டர் ஆக கொலை செய்தது என்ன... என்ன... என்ன...?

இந்திரா சர்வாதிகாரி அரக்கி என்றது என்ன...என்ன...என்ன...?

கோடி சொத்தைக்காக்க இந்திராவின் காலடியில் வீழ்ந்தது என்ன...என்ன... என்ன..?

ஜனவரி 6க்குப் பின் மக்கள் அடித்துத் துரத்தியபின் அடுத்த மோசடித் திட்டம் என்ன...என்ன...என்ன...?

உன் சாரீரத்தைவிட எங்கள் குரல் ஓசத்தியாக்கும்! ஏனெனில் இது நீதி, நேர்மை பாடும் குரலாயிற்றே!

வால்மீகி

---

## புரட்சித் தலைவரின் அருமையான படங்கள்

தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா, மூதறிஞர் ராஜாஜி, பெருந்தலைவர் காமராஜர் போன்ற இயக்கத் தலைவர்களுடன் புரட்சிதலைவர் இருக்கும் அற்புதமான படங்களும் பல்வேறு கோணங்களில் புரட்சித்தலைவரின் தனிப் படங்களும் கிடைக்கும்.

விவரங்கட்கு;

கா. அ. மணிமாறன்,
அண்ணா போட்டோ சப்ளையர்
49, மேற்கு மாடவீதி,
திருவொற்றியூர்
சென்னை-19

## திருத்தம்

எஸ். பிரேம்சந்த், 122, பி. எச். ரோடு, கெல்லீஸ் சென்னை-10 ஏலத்தேதி- 26-12-79 மாலை 3 மணி என்றிருந்ததை 31-12-79 தேதிக்கு மாற்றப்பட்டுள்ளது. என்பதை இதன் மூலம் அடகு வைத்துள்ள பொதுமக்களுக்கு தெரியப் படுத்திக் கொள்கிறோம்,

தரம்சந்த் ஜெயின்

## ஏல விளம்பரம்

1) G. ரிகப்சந்த் ஜெயின், 50, பிள்ளையார் கோயில் தெரு, சென்னை-5 (1973 ஏப்ரல் to செப்டம்பர் 1978) 2) ஷா. மோகன்லால் ஜெயின் 50, பிள்ளையார் கோயில் தெரு, சென்னை-5 (1973 மே to ஜூலை 1975) 3) ராஜேந்திரா கம்பெனி 50, பிள்ளையார் கோயில் தெரு, சென்னை,5 (1975 பிப்ரவரி to அக்டோபர் 78) 4) மஹாவீர் கம்பெனி 50, பிள்ளையார்கோயில் தெரு, சென்னை-5 (1975 ஜூலை to செப்டம்பர் 1978) ஆகிய ஏலங்கள் 4-1-80 அன்று 11 மணிக்கு மேலும். 5) M. நேமிசந்த்ஜெயின் 12, ஜானிபாட்சாசாயுபு தெரு, செ 14 (1973 ஆகஸ்டு to ஜூலை 1978) 6) M. பர்தாப்மல் ஜெயின் நெ.39, குப்புமுத்துமுதலிதெருசெ.5 (1973 டிசம்பர் to ஜூலை 78 7) S. மோஹன்லால் ஜெயின், நெ. 35, இருசப்ப கிராமணி தெரு. செ.5 (1973 செப்டம்பர் to பிப்ரவரி 1975) 8) H. பாபுலால் ஜெயின், 386 திருவல்லிக்கேணி ஹைரோட் செ.5 (1975 ஏப்ரல் to நவம்பர் 1976) 9) கட்டாரியா அண்டு கோ, 212, டி. எச். ரோட் செ.5 (1977 மே to ஜூன் 1978) எண் 5லிருந்து 9 முடிய ஏலங்கள் 5-1-80 அன்று 11 மணிக்கு மேல் மேற்படியாளர்கள் வசம் கெடுவு முடிந்த அடகு பொருள்களை நெ-64 எல்லீஸ் ரோட் செ-2ல் A. கிரிதாரிலால் அவர்கள் வருவாய்துறை அதிகாரிகள் முன்னிலையில் ஏலம் போடுவார்.

## ஏல விற்பனை

1. ஆர். பூல்சந்த் சோரடியா, 47, அருணாசல நாயக்கன் தெரு, சென்னை 2 (1973 அக்டோபர் முதல் மே 78முடிய) 2, எஸ் சாந்திலால் 45, வில்லேஜ்ரோடு. சென்னை-34 (1974 முதல் 78 மே வரை) 3, சி.மானக் சந்த், 139, வால்டாக்ஸ் ரோடு, சென்னை-3 (1977 ஆகஸ்ட் முதல் 78 அக்டோபர் வரை) 4) பிஜயராஜ் முத்தா, 44, ஜீனிஸ்ரோடு சென்னை-15. (1973 முதல் 75 வரை) மகாவீர் அண்டு கோ, 20, கல்மண்டபம் ரோடு, சென்னை-13 (1975 முதல் 1977வரை) மேற்கண்ட கடைகளில் அடகு வைத்து மீட்கப் படாத கெடுதவறிய பொருட்களை, 2 1-80 அன்று காலை 10 மணிக்கு மேல் அரசு ஏலதாரர்கள், M ஜவஹர்லால் போரா 60, சாமி பண்டாரம், தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2ல் வருவாய்த் துறை அதிகாரிகள் முன்னிலையில் ஏலம் போடப்படும்.

---

# முதல்வர் எழுச்சி உரை (முதல்பக்க தொடர்ச்சி)

வியை ஏற்கப்போகிறார். (ஆரவாரம் பலத்த கைதட்டல்)

## கருணாநிதி புளுகிற்கு பதிலடி

கப்பல் பேரம் சம்பந்தமாக நான் ராஜினாமாச் செய்யவேண்டும் என்று கருணாநிதி சொல்லி வருகிறார்.

சட்டமன்றத்திலே ராஜினாமா செய்யச் சொல்லி அவர் கேட்கவுமில்லை. நான் சொல்லவுமில்லை.

சுப்ரீம் கோர்ட் நீதிபதி விசாரணை தேவை என்றுதான் கேட்டார். நானும் சரி என்று ஒப்புதல் அளித்து அது பற்றி பிரதமருக்கு கடிதம் எழுதியிருக்கிறேன். அது பற்றி முடிவு செய்யவேண்டியது பிரதமர்தான்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

நெல்லை மாவட்டத்திலுள்ள மூன்று நாடாளுமன்றத் தொகுதிகளிலும் கழகத்தின் ஜனநாயக முற்போக்கு கூட்டணி வேட்பாளர்களை வெற்றி பெறச் செய்வோம் என்று புரட்சித்தலைவரிடம் லட்சோப லட்சம் மக்கள் உறுதியளித்தார்கள்.

இரவென்றும் பகலென்றும் கொளுத்தும் வெயில் என்றும்கொட்டும் பனியென்றும் பாராமல் ஆண்கள், பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள், வாலிபர்கள், தொழிலாளர்கள், விவசாயிகள் மாணவர்கள் இப்படி எல்லோரும் புரட்சித்தலைவரின் திருமுகத்தைக் காணவும் அவரது பேருரையைக் கேட்கவும் பல மணிநேரம் காத்து நின்றனர்,

நெல்லை, தென்காசி, திருச்செந்தூர் ஆகிய மூன்று நாடாளுமன்றத் தொகுதிகளைச் சேர்ந்த பேரூர்கள், சிற்றூர்களில் புரட்சித்தலைவர் மின்னல் வேகத்தில் சுற்றுப்பயணம் செய்தார.

நெல்லை, வேலநத்தம், மேலப்பாளையம், பாளையங்கோட்டை. கருவங்குளம், ஸ்ரீவைகுண்டம். பேரூர் மற்றும் பல்வேறு இடங்களில் நடந்த மிகப் பிரும்மாண்டமான பொதுக் கூட்டங்களில் முதல்வர் புரட்சித்தலைவர் இன்றைய அரசியல் நிலையை மிகத் தெளிவாக விரிவாக எடுத்துரைத்த போது ''எங்கள் வாக்கு கழகஜனநாயக முற்போக்குக் கூட்டணிக்கே'' என்று கூடியிருந்த லட்சோபலட்ச மக்களும் முழங்கினார்கள்.

வெற்றிச் சின்னமான இரட்டை இலைக்கு அடையாளமாகபுரட்சித்தலைவர்தமது இருவிரல்களை காட்டிய போது விண்ணதிர வாழ்த்து முழக்கங்களை எழுப்பி கரவொலி செய்த பொது மக்கள் ''வெற்றி நமதே வெற்றி நமதே'' என்று முழங்கினார்கள்.

## தொடரும் பயணம்

புரட்சித்தலைவர் இன்று (புதன்கிழமை) சங்கரன் கோவில், ராஜபாளையம், ஸ்ரீவில்லிபுத்தூர், சிவகாசி பகுதிகளில் மின்னல்வேகச் சுற்றுப்பயணம் செய்து லட்சோப லட்சம் மக்களைச் சந்திக்கிறார்.

முதல்வர் புரட்சித்தலைவர் இன்று (புதன்கிழமை) நள்ளிரவிலோ நாளை (வியாழன்) அதிகாலையிலோ மதுரை வந்து சேருவார் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

---

## சென்னையில் சாந்திபூஷண் பேசுகிறார்

சென்னை, டிச. 26- சென்னை நகரில் நாளை 27-ந் தேதி மாலை நடக்கும் தேர்தல் பிரச்சாரக் கூட்டங்களில் சாந்திபூஷண் கலந்து கொண்டு பேசுகிறார்.

---

# சிகாமணி எம். எல். ஏ. கார் மீது தி. மு. கவினர் வெறித் தாக்குதல்

சென்னை, டிச. 26- எண்ணூரில் தேர்தல்பிரச்சாரப் பொதுக்கூட்டத்தில் கலந்து கொண்டு விட்டு, காரில் வந்துக் கொண்டிருந்த கழக சட்டமன்ற உறுப்பினர் சிகாமணி கார் மீது தி.மு.க. வினர் வெறித் தாக்குதல் நடத்தினார்கள்.

திருவொற்றியூர் தேரடி தெருவில் கழகத்தோழர் பூபாலனும் மற்றும் சிலரும் தேர்தல்பணியில் ஈடுபட்டிருந்தார்கள்.

அப்பொழுது திருவொற்றியூரைச் சேர்ந்த டி. கே. பழனிசாமி மற்றும் சில காலிகள் சேர்ந்து கழகத் தோழர் பூபாலன் அவரது மனைவி மற்றும் கழகத் தோழர்களைத் சோடா பாட்டில் கற்கள் முதலியவற்றைக்கொண்டு தாக்கினார்கள்.

இதுபற்றி எண்ணூரில் தேர்தல் பிரசார பொதுக் கூட்டம் ஒன்றில் தொழிலாளர் நல அமைச்சர் ராகவானந்தத்துடன் சென்றிருந்த கழக சட்டமன்ற உறுப்பினர் சிகாமணியிடம் தெரிவிக்கப்பட்டது. இதனை விசாரிக்க அவர் புறப்பட்டு சென்றார்

கழகத் தோழர்களைத் தாக்கிய தி மு க காலிகள் சிகாமணியின் கார்மீதும் தாக்குதல் நடத்தினார்கள். இது பற்றி போலீசில் புகார் செய்யப்பட்டது. திருவொற்றியூர் போலீசார் 3 பேர்களை கைது செய்துள்ளனர்.

---

# யாரை மிரட்டுகிறாய்?

(தினத்தந்திக்கு) என்ன விபரீதங்கள் என்று கேட்காதே! விரைவில் வெளி வரும்.

–கருணாநிதி ''அஞ்சலட்டை''

என்ன, பிளாக்மெயில் வேலையா?

சமீபத்தில் ஒரு ஆசாமி பிடிபட்டான்-நடிகைகளின் நிர்வாணப் படங்களை வைத்துக்கொண்டு ''பிசினஸ்' நடத்தியதற்காக. அப்படி நீ ''பிசினஸ்'' ஆரம்பித்துவிட்டாயா? பழைய பழக்கமா?

விரைவில் வெளிவரும் என்றால் என்ன அர்த்தம்?

ஊர்ப்பணத்தை மேய்ந்து அதற்கு கைக்கூலி சாட்சியமாக' கோடிச் சொத்துக்களை மெயின் ரோடுகளில் வாங்கிப் போட்டு ஊரை ஏமாற்றித் திரியும் வெகுஜன விரோதியே!

இனியும் தொழிலை நடத்திவிடலாம் என்று பார்க்கிறாயா? தமிழக மக்கள் என்ன அந்த அளவுக்கு ஏமாளிகள் என்று தப்புக்கணக்குப் போடுகிறாயா?

தமிழன்-மானம் உள்ளவன்!

மோசடிப் பேர்வழிகள் - பிக்பாக்கெட்டுகள்- ஊரை ஏய்த்து சொத்து வாங்கியவன் - ஒழுக்கக் கேடன் போன்றவர்களிடம் தமிழன் லேசில் ஏமாந்துவிடமாட்டான்

கமலபதி

---

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275. அவ்வைசண்முகம்சாலை.சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனால் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவா பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை 600004.
ஆசிரியர்: எம்.ஜி. சக்ரபாணி

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| 1 வருடச் சந்தா தொகை | ரூ. 130 |
| 6 மாதச் சந்தா தொகை | ரூ. 65 |
| 3 மாதச் சந்தா தொகை | ரூ. 32-50 |

3 மாதத்திற்கு குறைவான சந்தா தொகை ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாது.

நிர்வாகி:

"அண்ணா"

275, அவ்வை சண்முகம் சாலை, சென்னை-6000 014.


# அண்ணா





### தபால் தந்தி துறை

சென்னை-18, தேனாம் பேட்டை, சுப்பராய நகரில் உள்ள தபால் தந்தி ஊழியர்கள் குடியிருப்பில் கூடுதல் கழிவறைகள், பள்ளியையும் சேர்த்து காம்பவுண்ட் சுவரை உயரப்படுத்துதல் மற்றும் இதர சிறிய வேலைகளுக்கான மூடி முத்திரையிட்ட ஐட்டம் ரேட் டெண்டர்களை செயற் பொறியாளர், தபால் தந்தி சிவில் பிரிவு ii சென்னை-8 அவர்கள் பதிவு மற்றும் தகுதி பெற்ற ஒப்பந்ததாரர்களிடமிருந்து 11-1-80 வரை வரவேற்கிறார். தோராய மதிப்பீட்டு தொகை ரூ. 33,408-00 ஆகும். டேவணித் தொகை டெபாஸிட் ரூ. 835 00 ஆகும். டெண்டர்கள் அன்றே பிற்பகல் 3-30 மணிக்கு திறக்கப்படும்.

டெண்டர் படிவங்கள் மற்றும் நிபந்தனைகளை இதே அலுவலகத்திலிருந்து ரூ. 20 85 காசுகள் செலுத்தி மற்றும் ஒரிஜினல் நடப்பு வருமான வரி செலுத்திய சான்றிதழ்கள், ஒரிஜனல் என்லிஸ்ட்மெண்ட் சான்றிதழ்கள் முதலியவைகளை சமர்ப்பித்து 10-1-80 வரை பெற்றுக்கொள்ளலாம். டெண்டர் படிவங்களின் விலையை பணமாகவோ அல்லது மணியார்டர் மூலமோ அக்கவுண்ட்ஸ் ஆபீசர், தபால் தந்தி சிவில் பிரிவு ii, சென்னை-8 அவர்களிடம் செலுத்தவேண்டும்.

டிஏவிபி 710(1319)-79

# புலி பதுங்குவது பாய்ச்சல்

"ஊழலிலே உடலை வளர்த்துக் கொண்டிருப்பவர்கள்" என்று முரசொலி கூட இப்பொழுது எழுத ஆரம்பித்து விட்டது.

என்னங்கப்பா! சுய சரிதம் எழுதுகிறீர்களா?

ஊர் முழுதும் காறித் துப்பினாலும் உங்களுக்கு மானம், ரோஷம் வராது என்பது எல்லோருக்கும் தெரியும்.

உங்கள் விவகாரம் முழுதும் ஒரு சாவி விவகாரம் இல்லையே... எல்லாம் பல சாவிகள் விவகாரம்.

மூச்சுவிடவில்லை- பதில் இல்லை என்றெல்லாம் யாரைப் பார்த்துக் கதைவிடுகிறாய்?

புலி பதுங்குவது பாய்ச்சலுக்காக...!

இப்போதைக்கு இதை மட்டும் சொல்லிவைக்கிறோம்!

-கா

இந்திரா தொகுதியில்

## ஜனதாவுக்கு மார்க்சிஸ்ட் ஆதரவு

விஜயவாடா, டிச. 26- ஆந்திராவில் மேடக் தொகுதியில் இந்திராகாந்தியை எதிர்த்துப் போட்டியிடும் ஜனதா கட்சி வேட்பாளர் ஜெயபால் ரெட்டியை ஆதரிப்பதென மார்க்சிஸ்ட் கட்சி முடிவு செய்துள்ளது.

மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் மேதுரி அனுமந்தராவ் விடுத்துள்ள ஓர் அறிக்கையில் இந்திராவைத் தோற்கடிக்க ஜனதாவுக்கு ஆதரவாக இதரவேட்பாளர்கள் விலகிக்கொள்ள வேண்டும் என்று தெரிவித்துள்ளார்.

ஜனதாவுக்கு ஆதரவாக லோக்தளம் வேட்பாளரை விலக்கிக்கொண்டதை வரவேற்றுள்ளார்.



# அபராதவட்டி சலுகை: தமிழக அரசு வேண்டுகோள்

சென்னை, டிச. 26- தமிழகத்தில் உள்ள எல்லா விவசாயிகளும் தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிகள் மூலம் பெற்ற கடன்களுக்கு அபராத வட்டி தள்ளுபடி செய்யப்படும் என்று தமிழக அரசு அறிவித்துள்ளது.

தமிழ்நாட்டில் உள்ள விவசாயிகள் கூட்டுறவுநிலவளவங்கிகள் மூலம்தங்கள் விவசாயத்திற்கு கடன் பெற்றனர்.

அந்த கடன்கள் உரிய நேரத்தில் கட்டப் படாததால், அதற்கு அபராத வட்டி கட்ட வேண்டும் என்று நிலவள வங்கிகள் அறிவித்திருந்தன. ஆனால் அரசு அந்த அபராத வட்டியை விவசாயிகளிடம் இருந்து வாங்கக்கூடாது என்று அறிவித்து நிலவளவங்கி அறிவித்து அபராத வட்டி முறையை தள்ளுபடி செய்தது.

விவசாயிகள் நிலவள வங்கியில் வாங்கிய பாக்கிகளை திருப்பித் தரவேண்டிய தேதி 30-9-79 என்று முன்புஅரசு அறிவித்திருந்தது. ஆனால் இப்போது 15-1-1980 தேதிக்குள் கட்டவேண்டும் என்று அரசு அந்த தேதியை மாற்றி அமைத்து உத்திர விட்டுள்ளது.

எனவே விவசாய குடிமக்கள் அனைவரும் மேலே குறிப்பிட்டுள்ள தேதிக்குள் கூட்டுறவு நிலவள வங்கியில் செலுத்தவேண்டிய பாக்கி தொகையை கட்டிவிடவேண்டுமென்று தமிழ்நாடு அரசு கூட்டுறவு நிலவளவங்கி அறிவித்துள்ளது

### ஈரோடு

ஈரோடு 8-வது வட்டத்தில் தேர்தல் பணிமனைத் திறப்புவிழா நடந்தது. சு. முத்துசாமி எம் எல் ஏ தலைமையில் வேட்பாளர் ஆர். குழந்தைவேலு தேர்தல் அலுவலகத்தைத் திறந்துவைத்தார். ஈரோடு அழகரசன் ச. விசுவநாதன் இரா. முத்து பி. முகமது பிலால் மற்றும் பலர்

# என்ன இருந்தாலும் பழையபுத்தி போகுமா?

"மணவறைக்கு ஒருவன்-மஞ்சத்திற்கு மற்றொருவன் என்பது மாதிரி,.."

-கருணாநிதி பேச்சு

அடிக்கிற காற்றில் எச்சில் இலைகள் கோபுரத்தில் ஒட்டிக்கொள்வதால் அவை கலசங்கள் ஆகிவிடவில்லை.

எத்தனை உயர்ந்த இடத்தில் உட்கார வைக்கப்பட்டாலும் பழையபுத்தி போவதில்லை.

"மணவறைக்கு ஒருவன்- மஞ்சத்துக்கு ஒருவன்" என்பது தமிழ்ப் பண்பாடு அல்ல.

கோபாலபுரத்தார் அதற்கு விலக்காக இருப்பதில் நமக்கு ஆட்சேபமில்லை.

-கா

# தேர்தல் களம்

### மடுவின் கரை

26-12-79 புதன் மாலை 7மணிக்கு பிள்ளையார் கோவில் தெருவில் ஏ. துரை தலைமையில் பேசுவோர்:

டி. கே. சீனிவாசன், புலவர் புலமைபித்தன் எம் எல். சி, வழக்கறிஞர் முத்துகிருஷ்ணன், சைதை துரைசாமி, ஏ. சுப்பிரமணி, வி. வேலுச்சாமி, என். எஸ். மோகன்' வி. என். விஸ்வநாதன், கிருஷ்ணமூர்த்தி, கே. ராமசாமி, சந்துரு, கே. பி. சாரதி, நரசிம்மன் மற்றும் பலர்.

### அசோக்நகர்

26-12-79 புதன்கிழமை மாலை 7மணிக்கு அசோக் நகர், காமராசர் சாலையில் சுப்பராயன் தலைமையில் பேசுவோர்: தேங்காய் சீனிவாசன், தரங்கை கண்ணன், ஆர். ராம கிருஷ்ணபாபு, ஜெ. பாலன் கு. க. செல்வம், சா. கோவிந்தசாமி, எஸ். எம். துரையரசன்' ஏ. பி. வரதராசன், தி. நகர் மூர்த்தி, மா. ராஜா ஆ. சுப்பையா, மு. ராமலிங்கம், பரந்தாமன் பி. பழனிமற்றும்பலர்

### சிந்தாதிரிப்பேட்டை

26-12-79 அன்று இரவு 7மணிக்கு சென்னை 186வது வட்டம் சிந்தாதிரிப் பேட்டை பாலகிருஷ்ண பிள்ளைத்தெருவில் பி. சாமி தலைமையில் பேசுவோர்: பேரவைச்செயலர் ஐசரி வேலன், ரமணிபாய், வண்ணை கோவிந்தன், சி வி அன்புத்தம்பி, வி. ராஜ்குமார், அ. வ. செல்வக் கண்ணன், பெ. புகழேந்தி ஆர். டி. அம்பிகாபதி, கே வெங்கட், இ. சண்முகம் டி. சத்தியநாதன் மற்றும் பலர்.

### 122 வது வட்டம்

26-12-79 புதன் மாலை 7 மணிக்கு சென்னை 122-வது வட்டம், திரு. வி. க. குடியிருப்பு, ஆலையம்மன் கோயில் எதிரில் மு. மன்னன் தலைமையில் பேசுவோர்: எஸ். எஸ். ஆர், பா. ராமச்சந்திரன், பா. அங்கமுத்து, இலா. இ. அன்புமணி, சி. வி. அன்புத்தம்பி, ஜெ. டி. தயாளன், கே. எஸ், மணி, எம். பக்கிரிசாமி, எஸ். குப்புசாமி எஸ். ஜானகி மற்றும் மலா.

### பாப்பரம்பாக்கம்

27-12-79 வியாழன் மாலை 6மணிக்கு பாப்பரம்பாக்கம் அண்ணா திடலில் பா. ச. பொன்னுசாமி தலைமையில் பேசுவோர்: திருப்பெரும்புதூர் கழக வேட்பாளர் எஸ். ஜெகந்நாதன், இரா. சண்முகம் எம். எல். ஏ ஒதிகை ஓ. ஆர். ராதா கே. காசி, வலசை பெருமாள், எரியீட்டி கோவிந்தன் ஆர்-ஏழுமலை, இ. சுந்தரம் எம். எஸ். ரகீம், து. ஜெயராமன், இ. கிருஷ்ணன் உத்திரக் குமாரன் கே. பி. மணி மற்றும் பலர்.

கவிஞர் கோவலன் பொற்செல்வி குழுவினரின் கலைநிகழ்ச்சி நடைபெறும்.

### நெய்வேலி

30-12-79 ஞாயிறு மாலை 6மணிக்கு நெய்வேலி வட்டம் 17-அண்ணாசிலை அருகே எஸ். பி. சாதுல்லா தலைமையில் பேசுவோர்: புலவர் வேதா, பி. எஸ். மகாலிங்கம், ரத்தினபால குருசாமி எம். எல். சி, இரா. கரிகாலன், முகமது அனிபா, துரை, கதிரேசன், என். ராஜரத்தினம், ஏ. ஆர். இளங்கோ, டி. காசிநாதன், கேசவன், புஷ்பராஜ், விசயாமுத்து வண்ணன், சி. ஆர். வாசுதேவன், வி. ராமமூர்த்தி, வி. நாராயணன், எம். எஸ் சர்தார்பாஷா, (ஆபலா)

விக்டர், கே. கோவிந்தராசன் மற்றும் பலர்.

### குரோம்பேட்டை

27-12-79 வியாழன் மாலை 6மணிக்கு எம். ஐ. டி. சந்திப்பு அருகில் நாஞ்சில் கிருஷ்ணன் தலைமையில் பேசுவோர்:

டாக்டர் ஹண்டே எம் எல். சி, தமிழருவி மணியன், கே. எம். அப்துல் ரசாக் எம். எல். சி, எஸ். பிரிட்டோ அமல்தாஸ், அரிபட், அங்குசாமி, செல்வராஜ் மற்றும் பலர்.

### தாண்டவன்குப்பம்

31-12-79 திங்கள் மாலை 6 மணிக்கு தாண்டவன் குப்பம், அண்ணா சிலை அருகே துரை. கதிரேசன் தலைமையில் பேசுவோர்: அமைச்சர் கே. ஏ. கே., வேட்பாளர் பி, எஸ். மகாலிங்கம், இரா. கரிகாலன், முகமது அனிபா, ந. ராசரத்தினம், வி. நாராயணன், கவிஞர் கோவிந்தசாமி, செ. மாடசாமி, கிருஷ்ணசாமி, ராமமூர்த்தி எஸ். நித்தியானந்தம், ஆர். கஞ்சமலை மற்றும் பலர்.





சென்னைவடக்குமத்தியதெற்குதொகுதிகளின்

# தேர்தல் பிரச்சாரப் பணிக்குழு அறிவிப்பு

**அமைச்சர் ராகவானந்தம் நிகழ்ச்சிகள்**

| | | | |
|---|---|---|---|
| 28-12-79 | இரவு | 7 மணி | விருகம்பாக்கம் |
| 28-12-79 | இரவு | 9 மணி | தி. நகர் |
| 28-12-79 | இரவு | 10 மணி | திருவல்லிக்கேணி தொகுதி (103-வதுவட்டம்) |
| 29-12-79 | காலை | | சைதை தொகுதியில் வாக்காளர்களைச் சந்தித்தல் |

**நடிகர் தேங்காய் சீனிவாசன் நிகழ்ச்சிகள்**

| | | | |
|---|---|---|---|
| 27-12-79 | மாலை | 6 மணி | ராயபுரம் தொகுதி |
| 27-12-79 | இரவு | 8 மணி | 149-வது வட்டம் |
| 27-12-79 | மாலை | 6 மணி | பெரம்பூர் தொகுதி |
| 28-12-79 | இரவு | 8 மணி | சைதை தொகுதி |
| 30-12-79 | மாலை | 6 மணி | இராதாகிருஷ்ணன் நகர் தொகுதி |
| 30-12-79 | இரவு | 8 மணி | மத்திய சென்னை 87-வது வட்டம் |

**எம். கே டி. சுப்பிரமணியம் (தமிழ்நாடு காங்கிரஸ் காமராஜ்)**

| | | | |
|---|---|---|---|
| 27-12-79 | இரவு | 7 மணி | பெரம்பூர் தொகுதி |
| 27-12-79 | இரவு | 8 மணி | துறைமுகம் தொகுதி |
| 28-12-79 | இரவு | 7 மணி | ராதாகிருஷ்ணன் நகர் தொகுதி |
| 28-12-79 | இரவு | 8 மணி | திருவொற்றியூர் தொகுதி |
| 30-12-79 | இரவு | 7 மணி | இராயபுரம் தொகுதி |
| 30-12-79 | இரவு | 8 மணி | வில்லிவாக்கம் தொகுதி |

**தி. சு. கிள்ளிவளவன் (தமிழ்நாடுகாங்கிரஸ் காமராஜ்)**

| | | | |
|---|---|---|---|
| 27-12-79 | | | ஆலந்தூர் தொகுதி |
| 28-12-79 | மாலை | 6 மணி | 131-வதுவட்டம் |
| 28-12-79 | இரவு | 8 மணி | 136-வது வட்டம் |

கே. நிலவழகன்

தலைவர்

சென்னை வடக்கு-மத்திய தெற்கு தொகுதிகளின் தேர்தல் பிரச்சாரப்பணிகுழு

புரட்சித்தலைவரின் கருணை!

# தமிழ்நாட்டில் சிறைக் கைதிகள் தண்டனை குறைப்பு

சென்னை, டிச. 26- தமிழ் நாட்டில் சிறைக்கைதிகளுக்கு தண்டனை குறைப்பு செய்து தமிழ் நாடு அரசு அறிவிப்பு செய்துள்ளது

கழக அரசு அறிவித்துள்ள தண்டனைக் குறைப்பு விவரம் பின் வருமாறு,

10 ஆண்டுகளுக்கு மேல் சிறைத்தண்டனை அனுபவித்து வருகிறவர்களுக்கு ஓராண்டு காலம் தண்டனை குறைப்பு செய்யப்படும்:

5 முதல் 10 ஆண்டுகள் வரை சிறை தண்டனை அனுபவித்து வருகிறவர்களுக்கு 6 மாதகாலம் தண்டனை குறைப்பு 3 ஆண்டுகள் வரை தண்டனை பெற்று, அனுபவித்து வருகிறவர்களுக்கு 2 மாதம் தண்டனைகுறைப்பு, 3 மாத காலத்திற்கு மேலும் ஓராண்டுக்குகுறைவாகவும் தண்டனை பெற்ற கைதிகளுக்கு அவர்களது தண்டனைக்கால அளவில் பாதி அளவுக்கு தண்டனை அனுபவித்திருந்தால் விடுதலை செய்யப்படுவார்கள்

இந்த சலுகை கிடைக்காத கைதிகள் 3 மாத தண்டனை குறைப்பு சலுகையைபெறுவார்கள்.

3 மாதமும் அதற்குக் குறைவாகவும் தண்டனை பெற்றவர்கள் தாங்கள் அனுபவிக்காத தண்டனைக் கால அளவை குறைப்பு சலுகையாக பெறுவார்கள்

மதுவிலக்கு சட்டத்தின் 4(1)(a), 4(1)(J) இப்பிரிவில் அல்லாத குற்றங்களுக்கு தண்டனை பெற்றவர்கள் தண்டனை காலத்தின் கால்பகுதி கால அளவை தண்டனை குறைப்பு சலுகையைப் பெறுவார்கள்.

மேற்படி தண்டனை காலக்குறைப்பு, சலுகைகள் அரசாங்கரகசியங்கள், பாதுகாப்பு சட்டம், வெளிநாட்டினர், பாஸ் போர்ட் இவற்றின் கீழ்தண்டனை பெற்றவர்களுக்கும், மரண தண்டனை பெற்றவர்களுக்கும் சில விதிமுறைகளுக்கு உட்பட்டு பொருந்தாது.